# கல்கி

KALKI 19.2.95 ரூ. 3.00

உள்ளே...



• விதியை வென்ற ஜெயஸ்ரீ!
— உலுக்கும் உண்மைக் கதை





## தேசிய முன்னணி அ.தி.மு.க.வில் சேருமா?

# கிட்னி திருட்டு: வெளிவராத தகவல்கள்!

ஆயிரக்கணக்கான அப்பாவிகளை ஏமாற்றி, கிட்னிகளைக் களவாடிய டாக்டர்கள் பற்றிய தகவல் ஒன்றும் புதிதல்ல. ஒன்றரை வருடத்திற்கு முன்பே KMC எனப்படும் கர்நாடக மெடிக்கல் கவுன்சிலுக்கு இந்தத் தகவல் கிடைத்திருக்கிறது. அவர்கள்தான் சரியான நடவடிக்கை எடுக்காமல், போலீசுக்கும் தெரியப்படுத்தாமல் அக்கறை இன்றி இருந்து விட்டார்கள். இதுதான் சதிகாரர்களின் இத்தனை அசுர வளர்ச்சிக்குக் காரணம் என்று சொல்லப்படுகிறது. அவர்கள் மட்டும் உரிய நேரத்தில் செயல்பட்டிருந்தால் நூற்றுக்கணக்கான அப்பாவிகள் பாதாளத்தில் விழுந்திருப்பதைத் தடுத்து நிறுத்தியிருக்காலம்.

ஒன்றரை வருடங்களுக்கு முன்பே சவூதி அரேபியாவின் கான்சலேட்டிலிருந்து இங்கே நடைபெறுகிற அக்கிரமத்தைச் சுட்டிக் காட்டி விசாரணை செய்யச் சொல்லி தகவல் வந்திருக்கிறது! இவர்கள் சம்பந்தப்பட்ட டாக்டர்களை அழைத்து, பேருக்கு விசாரணை என்று கேள்வி கேட்டு அனுப்பி வைத்ததோடு சரி.

ஒரு சிவில் கோர்ட்டுக்கு இருக்கிற அதிகாரம் இந்த மெடிக்கல் கவுன்சிலுக்கு இருக்கிறது. டாக்டர்களை தண்டிக்கவும், அவர்களின் அங்கீகாரத்தை ரத்து செய்யவும் மெடிக்கல் கவுன்சிலால் முடியும். ஆனாலும் இத்தனை நாட்களும் தூங்கிக் கொண்டிருந்துவிட்டு இப்போதுதான் சாவகாசமாக சம்பந்தப்பட்ட நான்கு டாக்டர்களின் அங்கீகாரத்தை ரத்து செய்திருக்கிறார்கள்.

இவர்களுக்குத் தகவல் வந்து சில டாக்டர்களை விசாரணைக்கு அழைத்த போதே அடில் என்ற டாக்டர், விசாரணை தொடர்ந்தால் மெடிக்கல் கவுன்சிலைச் சேர்ந்தவர்களின் உயிருக்கு ஆபத்து வரும் என்று மிரட்டினாராம். உடனே இந்தப் புண்ணியவான்களும் நமக்கேன் வம்பு என்று பேசாமலிருந்து விட்டிருக்கிறார்கள்.

"இவ்வளவு ஆகிவிட்டதே.நீங்கள் மட்டும் உரிய நேரத்தில் செயல்பட்டிருந்தால் இத்தனை தூரம் ஆகியிருக்காதே?"- என்ற கேள்விக்கு மெடிக்கல் கவுன்சில் தலைவர் டாக்டர் நஞ்சப்பா சொன்ன பதில் :

"நாங்கள் விசாரித்துக் கொண்டுதான்



இருக்கிறோம். போலீஸ்தான் அதற்குள் அவசரப்பட்டு நற்பெயரைத் தட்டிக் கொண்டு போய்விட்டார்கள்."

பெங்களூர், ஈரோடு, சேலம், பம்பாய், டெல்லி என்று ஆரம்பித்து சவூதி வரை நீண்டுள்ள இந்த சதிகாரர்களின் கைகள் மிகவும் நீளமானவை. இல்லையெனில் பெங்களூரின் அரசாங்க தலைமை மருத்துவமனையான விக்டோரியா ஆஸ்பத்திரியின் சிறுநீரக அறுவை சிகிச்சைப் பிரிவின் தலைவர் டாக்டர் சித்தராஜ், கைது செய்யப்பட்ட சிலமணி நேரங்களிலேயே ஜாமீனில் வெளி வந்திருக்க முடியாது. மின்னல் வேகத்தில் இவர் வெளிவந்த விஷயம் அரசாங்கத்துக்கே தெரியாதாம். மக்கள் மத்தியில் பரபரப்பாகிவிட்ட இந்த விஷயத்தில் இவ்வளவு பெரிய குற்றவாளி இவ்வளவு சர்வ சாதாரணமாக வெளியில் வந்து விட்டாரென்றால் அரசாங்கத்தைப் பற்றி மக்கள் என்ன நினைப்பார்கள் என்று பதறிப்போன அமைச்சர், 'முதல்வர் தேவே கௌடா ஊரில் இல்லாத சமயத்தில் இப்படியா நடந்து கொள்வது?' என்று போலீஸ் துறையைப் போட்டு முடுக்க, இப்போது போலீஸின் பிடிகொஞ்சம் இறுகி யிருக்கிறது என்று கேள்வி.

"தனியார் ஆஸ்பத்திரிகளில் இம்மாதிரி உறுப்புகள் திருடப்படுவதைத் தடுக்கவும், அப்படித் தவறுதலாக நடக்கும் தனியார் ஆஸ்பத்திரிகள் மீது கடுமையான நடவடிக்கைகள் எடுக்கவும் அரசாங்கத்திடம் போதுமான சட்டங்கள் இல்லையென்பது மட்டுமல்ல; இப்போது வரையறுக்கப்பட்டுள்ள சட்டங்கள் நிறைவேற்றப்பட்டாலும் அவை மிகவும் எளிதான தண்டனைகள் தரும் சட்டங்கள்தாம். இதனால் ஒரு பயனும் இல்லை"- என்கிறார் ஒரு வழக்குரைஞர்.

இதற்கிடையில் டாக்டர்களெல்லாம் சேர்ந்து தெரிவித்திருக்கும் கருத்துதான் இன்னும் வேதனையானது. "டாக்டர்கள் மீது இப்படியெல்லாம் அபாண்டமாய் பழிசுமத்தக் கூடாது. சம்பந்தப் பட்டவருக்குத் தெரியாமல் கிட்னி எடுக்கப்பட்டது என்ற கூற்றே தவறானது. கிட்னி எடுக்கப்படுவதற்கு முன்பு குறைந்த பட்சம் ஏழெட்டு சோதனைகளுக்காவது உட்பட்டாக வேண்டும். அப்படியிருக்க கிட்னியை எப்படி அவர்களுக்குத் தெரியாமல், அவர்களின் அனுமதி இல்லாமல் எடுக்க முடியும்...? இப்படியெல்லாம் செய்தி பரப்பி விட்டால் அப்புறம் ரத்தம் கொடுக்கக் கூட யாருமே முன்வரமாட்டார்கள்"- என்று கருத்துத் தெரிவித்திருக்கின்றனர் டாக்டர்கள்.

பெங்களூரிலிருந்து: **பெர்னாண்டஸ்**



# போலீஸால் நடந்த சாலை மறியல்!

"தபால்காரர்களை போலீஸ் தாக்கியதால், எதிர்ப்புத் தெரிவிக்கும் பொருட்டு அண்ணா சாலை தபால் நிலைய ஊழியர்கள் சாலை மறியலில் ஈடுபட்டதால், போக்குவரத்து ஒரு மணி நேரம் பாதிக்கப்பட்டது..." என்று தினசரிகளில் வந்த குட்டிச் செய்தி பலரது பார்வையிலிருந்து தப்பி இருக்கலாம்!

படித்த, மத்திய அரசு ஊழியர்கள், இப்படி திடீரென்று சாலையில் மறியல் செய்யலாமா? இதை போஸ்டல் ஊழியர்கள் சங்கச் செயலாளரான பாலசுப்பிரமணியத்திடம் கேட்டோம்.

"மேம்போக்காகப் பார்த்தால் உங்கள் கேள்வி நியாயமாகவே தோன்றும். ஆனால் நடந்த சம்பவத்தின் பரிமாணத்தைக் கேட்டால், 'ஐயய்யோ இப்படியா நடந்தது?' என்று நீங்களே பரிதாபப்படுவீர்கள்!" என்று விளக்க ஆரம்பித்தார்.

"சம்பவத்தன்று (2.2.95) ஸ்பீட் போஸ்ட் தபால்காரர்களான பிச்சைமுத்துவும், சவுந்தரும் இரவு ஒன்பது மணியளவில் டூட்டியை முடித்து விட்டு வெளியே வந்த போது பாட்டா சந்திப்பில் ஒரு சின்ன கூட்டம். இருவரும் கூட்டத்தை விலக்கிக் கொண்டு பார்த்த போது, எங்கள் குமாஸ்தாவான குணசேகரனை மூன்று பேர் அடித்துக் கொண்டிருந்தார்கள். உடனே இவர்கள், 'அடிக்காதீர்கள். என்ன விஷயம்?' என்று கேட்ட போது அடித்துக் கொண்டிருந்த மூன்று பேரில் ஒருவர், 'டேய், சப்-இன்ஸ்பெக்டரையே கேள்வி கேட்கறியா?' என்று இவர்களைத் தாக்கியிருக்கிறார்கள்!

"விஷயம் என்னவென்றால், குணசேகரன் மொபெட்டும் சப்-இன்ஸ்பெக்டர் என்று சொல்லிக் கொண்டவர் வந்த மோட்டார் சைக்கிளும் லேசாக மோதிக் கொண்டதுதான்.

"இதை குணசேகரனின் அஜாக்கிரதைதான் காரணம் என்று பொய்யாகக் குற்றம் சாட்டிய அந்த நபர், போக்குவரத்து போலீஸுக்குச் சொல்லாமல் குணசேகரனை தாக்கத் துவங்கி விட்டார். இத்தனைக்கும் அந்த நபர் போதையில் இருந்ததுடன் மோட்டார் சைக்கிளில் மூன்று பேராக வந்திருக்கின்றனர்.

"பிறகு ஒரு ஆட்டோவைக் கூப்பிட்டு, பிச்சைமுத்துவையும், சவுந்தரையும் அதில் ஏற்றியிருக்கிறார்கள். 'நாங்கள் தபால் துறை ஊழியர்கள்' என்று அடையாள அட்டையைக் காண்பித்த போது அவற்றைப் பிடுங்கித் தூர எறிந்திருக்கிறார்கள். அப்போது எதேச்சையாக ஒரு இன்ஸ்பெக்டர் வந்து விசாரித்திருக்கிறார். உடனே அந்த 'சப்-இன்ஸ்பெக்டர்', 'இவங்க சங்கிலி திருடிட்டாங்க' என்று பொய் சொல்லியிருக்கிறார். ஆட்டோவில் ஏறினவுடன் அந்த மூவரும் சேர்ந்து எங்கள் ஊழியர்களைக் கடுமையாகத் தாக்கியிருக்கிறார்கள்.

"திருவல்லிக்கேணி போலீஸ் ஸ்டேஷனுக்கு சென்ற போதுதான் 'சப்-இன்ஸ்பெக்டர்' என்று சொல்லிக் கொண்டவர், (பெயர்: மேனுவல் மைக்கேல்) ஒரு கான்ஸ்டபின் என்பதும், ராயப்பேட்டை ஆஸ்பத்திரி காவல் நிலையத்தில் பணிபுரிகிறார் என்பதும் எங்கள் ஊழியர்களுக்குப் புரிந்தது. ஆனால் அதற்குள் எங்கள் ஊழியர்களை நன்றாகவே அடித்திருக்கிறார்கள்!" என்று நடந்த சம்பவத்தை விளக்கிச் சொன்னார் பாலசுப்ரமணியம்.

சாலை மறியலின் விளைவாகத்தான் போலீஸ் அதிகாரிகள், அந்த கான்ஸ்டபின் மீது நடவடிக்கை எடுக்கப்படும் என்று உறுதி மொழி கொடுத்திருக்கிறார்கள். "இப்போது சொல்லுங்கள், நாங்கள் சாலை மறியலில் ஈடுபட்டது தவறா?" என்கிறார் பால சுப்பிரமணியம்.

— தில்லப்பா




# தேசிய முன்னணி அ.தி.மு.க.வில்

"நான் யாரையும் தேடிப் போவதில்லை; என்னை நாடித்தான் பிறர் வருவது வழக்கம்" என்று தன்னம்பிக்கையுடன்(?) அல்லது ஆணவத்துடன்(?) ஜெயலலிதா பேசியிருப்பதால், தலைப்பு பொருத்தமாகவே இருக்கிறது!

இந்தக் கேள்வியையும் அதன் விளைவாக எழும் சர்ச்சையையும் ஜெ. ரொம்பவும் ரசிக்கிறார், ஏன் விரும்புகிறார் என்றே சொல்லலாம். காரணம், இதுபோன்ற செய்திகள் டெல்லியில் உள்ள காங்கிரஸ் தலைவர்களின் வயிற்றைக் கலக்கும் என்பது ஜெவுக்கு நன்றாகவே தெரியும். ஆனாலும் மிக எச்சரிக்கையாக இருக்கிறார் ஜெ. என்பது சமீபத்தில் என்.டி.ஆருடன் சேர்ந்து பத்திரிகையாளர்களைச் சந்தித்தபோது புரிந்தது. "நாங்கள் காங்கிரஸ் எதிர்ப்பு அணியில் இருக்கிறோம்" என்று என்.டி.ஆர். சொன்னவுடன் உடனடியாக அந்தக் கருத்தை அவர் ஒப்புக்கொள்ளவில்லை! "ஒரு காலத்தில் காங்கிரஸுடன் நான் இருந்தேன்" என்ற ரீதியில் அவரது பதில் அமைந்தது!

இந்தப் பிரச்னை தி.மு.க.வுக்கு தர்மசங்கடத்தை உண்டாக்கியிருக்கிறது. 'ஓர் உறையில் இரு கத்திகளா?' - இதுதான் கேள்வி. தேசிய முன்னணியில் ஒன்று தி.மு.க. இருக்க வேண்டும் அல்லது அ.தி.மு.க. இருக்க வேண்டும்.

தி.மு.க. செய்தித் தொடர்பாளர் ஆலடி அருணா கூறுகிறார்:

"கடற்கரையில் நண்டுகள் திரிந்து கொண்டிருக்கும். ஆள் அரவம் கேட்டவுடன் பக்கத்தில்

• தெலுங்கு கங்கைத் திட்டம் : துக்கத் திட்டமா? துரிதமாகச் செயல்படும் திட்டமா?

இருக்கும் ஏதாவது ஒரு வளைக்குள் சென்று பதுங்கிவிடும். அந்த நண்டைப் போன்றவர்தான் ஜெயலலிதா!

"தேசிய முன்னணியின் வாழ்விலும் தாழ்விலும் நாங்கள் உடனிருக்கிறோம். துவக்கியவர்கள் நாங்கள். ஜெயலலிதாவோ அரசியல் ஆதாயங்களுக்காக அணிகளை மாற்றிப் பழக்கப்பட்டவர். வி.பி.சிங் அரசு கவிழ்வதற்கு அவரும் ஒரு காரணம். மத்திய அரசையும் காங்கிரஸையும் மிரட்டுவதற்கு இப்படி விளையாடுகிறார். அயோத்தியா பிரச்னையின் போது பா.ஜ.க.வுடன் சேர்ந்து கொண்டார். அத்வானியைச் சந்தித்தார். பின்னர் பா.ஜ.க. சட்டமன்றத் தேர்தல்களில் அடி வாங்கியபோது, காங்கிரஸுடன் மறுபடி தொடர்பு கொண்டார். இப்போது, 'சென்னா ரெட்டியை மாற்ற மாட்டேன்' என்று பிரதமர் சொல்லி விட்டதால் தேசிய முன்னணியின் பக்கம் சாய்கிறார். இவரது கடந்த கால அரசியல் நடவடிக்கையைத் தெரிந்தவர்கள் தங்கள் அணிக்கு இவரை அழைக்க மாட்டார்கள்!" என்கிறார் ஆலடி அருணா.

ஒருவேளை என். டி. ஆருக்கு தி.மு.க. மேல் ஏதாவது வருத்தம் இருக்குமோ?

"எந்த வருத்தமும் இல்லை. மாறாக, அ.தி.மு.க. வுடன் உறவு வைத்துக் கொள்வதுதான் என்.டி. ஆருக்கு வருத்தமளிக்க வேண்டும். சமீபத்தில் நடந்த சட்டமன்றத் தேர்தல்களில் சித்தூர் தொகுதியில் தெலுங்கு தேச வேட்பாளர் தோற்றதற்குக் காரணமே, அ.தி.மு.க. வேட்பாளர் வோட்டுக்களைப் பிரித்ததுதான். ஆனால் தி.மு.க. அந்தத் தேர்தலில் தெலுங்கு தேசத்துக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்தது. இதையெல்லாம் என்.டி.ஆர். எண்ணிப் பார்க்க வேண்டும்" என்கிறார் ஆலடி அருணா.

ஆனாலும் தேர்தலின்போது நிதியுதவி கேட்டதாகவும், மற்றும் எல்லைத் தொகுதிகளில் கலைஞரைப் பிரசாரம் செய்ய என்.டி.ஆர். அழைத்ததாகவும், இந்த இரு வேண்டுகோள்களும் நிறைவேற்றப்படாததுதான்

# சேருமா?

என்.டி.ஆர். தி.மு.க. மேல் கோபமாக இருப்பதற்குக் காரணம் என்றும் பேசப்படுகிறது.

போதாததற்கு மாறன் போன்றோரை சு.சுவாமி அடிக்கடி சந்தித்துப் பேசுவது தேசிய முன்னணித் தலைவர்களுக்குச் சந்தேகத்தை உண்டு பண்ணியிருக்கிறது என்றும் கூறப்படுகிறது.

ஜெயின் போக்கு குறித்து அ.தி.மு.க. பிரமுகர்கள் பேசவே தயங்குகிறார்கள். 'அம்மா எது செய்தாலும் கரெக்டாதாங்க இருக்கும்' என்பது சிலரின் வாதம். ஆனால், 'காங்கிரஸின் நட்பை இழப்பது சரியல்ல' என்கிற அபிப்பிராயமும் இருக்கிறது.

"குறுகியகால அரசியல் ஆதாயத்தை எதிர்பார்த்து அம்மா அரசியல் செய்யவில்லை. அம்மாவின் நோக்கம் டெல்லி அரியணைதான். 1996 ஆம் ஆண்டு பாராளுமன்றத்துக்குத் தேர்தல் வரப்போகிறது. ஒருவேளை அது முன்னதாக - இந்த வருடமே கூட வரலாம். அந்தத் தேர்த



"அந்த ஆசாமி போலீஸ் இல்லே, போலீஸ் டிரெஸ் போட்டுக்கிட்டு ஏமாத்தறான்னு நம்ம கேடி காளி எப்படிக் கண்டுபிடிச்சானாம்?"

"அவன்கிட்ட ஐம்பது ரூபாய் மாமூல் நீட்டினதை வாங்கலையாம்!"

- பாலு

• • •

◆ இந்தியா-பாகிஸ்தான் பிரிவினையின் போது, அகதியாய் டெல்லிக்கு ஓடி வந்தவர், இன்று அதே இடத்தில் முதலமைச்சராக இருக்கிறார். அவர் : மதன் லால் குரானா.

◆ இயக்குனர் சிங்கீதம் சீனிவாசராவ், தமது 'இக்கற்ற பார்வதி' படத்துக்காக ஜனாதிபதியிடமிருந்து தேசிய விருது பெற்றார். அந்தப் புகைப்படத்துக்குப் பக்கத்திலேயே, ஒரு கடிதத்தையும் ஃப்ரேம் போட்டு பத்திரமாய்த் தமது வீட்டில் மாட்டி வைத்திருக்கிறார். அது ராஜாஜி, தம் தி.பார்வதி கதையைத் திரைப்படமாய் எடுக்க, சீனிவாச ராவுக்கு அனுமதி கொடுத்து, கைப்பட எழுதிய கடிதம்.

◆ கேரளா, இந்தியாவில் கல்வி அறிவு பெற்றவர்கள் அதிகமுள்ள மாநிலம் மட்டுமல்ல. இந்தியாவிலேயே தற்கொலை விகிதம் மிக அதிகமான மாநிலமும் கூட என்று அதிகாரபூர்வமான ஓர் ஆராய்ச்சி மூலம் அதிர்ச்சியூட்டும் தகவல் வெளியாகியுள்ளது.

— மௌஷ்மி



# என்ன செய்கிறார் என்.டி.ஆர்?

கடந்த 1989 தேர்தலில் காங்கிரஸிடம் தோற்றதை என்.டி.ஆர். இலேசில் மறந்து விட முடியாது. அப்போது ஆந்திராவில் காங்கிரஸ் பிரசாரத்தை முன்நின்று நடத்தியவர் சென்னா ரெட்டிகாரு! இதையும் என்.டி.ஆர். அவ்வளவு சீக்கிரம் மறந்துவிட முடியுமா? அதனால் தான், 'என் விரோதியின் விரோதி எனக்கு நண்பன்' என்ற 'தத்துவத்தின்' அடிப் படையில் இன்று

வில் மத்தியில் எந்தக் கட்சிக்கும் மெஜாரிட்டி கிடைக்காது என்று கருதப்படுகிறது. மாநிலக் கட்சிகளின் கூட்டணியே நாட்டை ஆள்வதற்கு வாய்ப்பு. அதுபோன்ற சூழ்நிலையில் அம்மா பிரதமராக முடியாவிட்டாலும் துணைப் பிரதமராகவாவது வர வாய்ப்பிருக்கிறது. ராமராவ், ஹெக்டே, பிஜுபட்நாயக் போன்றோர் 'கருணாநிதியை விட ஜெ.தான் அதிக எம்.பிக்களைக் கையில் வைத்திருப்பார்' என்ற நம்பிக்கையில் அ.தி.மு.கவை வளைத்துப் போட விரும்புகின்றனர். பா.ஜ.க.வோடு தம்மை இணைத்துக் கொண்டால் தமிழகத்தில் அ.தி.மு.க. செல்லாக் காசு ஆகிவிடும் என்பது அம்மாவுக்குத் தெரியும். அதன் காரணமாகத்தான் தேசிய முன்னணித் தலைவர்களோடு இணக்கமாக இருக்கிறார். ஆனால் இதுவே முடிவல்ல. போகப் போக அம்மாவின் போக்கு புரியும்" என்று சொல்லி (பேரைப் போட்டுடாதீங்க!) புன்னகை செய்கிறார் அ.தி.மு.க. பிரமுகர் ஒருவர்.

மத்திய அரசு, தமது ஆட்சியைக் கலைத்து விசாரணைக் கமிஷன் போட்டால், தேசிய அளவில் அதைப் பிரச்னையாக்கவே, தேசிய முன்னணித் தலைவர்களோடு நெருங்கியிருக்கிறார் ஜெ. என்பது சிலரின் வாதம்.

தே.மு.வின் தலைவர் என்.டி.ஆர். என்றாலும், அவரே சுயமாக முடிவெடுத்து, அ.தி.மு.க.வுடன் உறவுகளை ஏற்படுத்திக் கொள்ள முடியாது. இதற்கு மேல்நிலைக் குழுவின் ஒப்புதலும் பெற வேண்டும். அ.தி.மு.க. வட்டாரத்தின் கனவு என்னவாயினும் இப்போதைக்கு பிஜுபட்நாயக்கும், ஹெக்டேயும், ஜெ.வுக்கு எதிரானவர்கள் தாம்!

சமீபத்தில் சென்னை வந்திருந்த வி.பி.சிங், ஜெ. ஆட்சியைப் பற்றி எதுவும் சொல்ல மறுத்து விட்டார்! கலைஞர் வட்டாரத்தில் இதுகுறித்து ஏக வருத்தம்.

"இதுபோன்ற விஷயங்களிலெல்லாம் எக்ஸ்ரே பார்வை பார்க்கத் தேவையில்லை. காரணம், தேசிய அளவில் பாதிக்கக் கூடிய பிரச்னைகளை மட்டுமே சிங் பேசி வருகிறார். மாநில (அது எந்த மாநிலமானாலும் சரி) பிரச்னைகளில் அவர் தலையிடுவது இல்லை" என்கிறார் தமிழக ஜனதா தளத்தின் பொதுச் செயலாளரான ஜெகவீரபாண்டியன். தொடர்ந்து அவர் பேசும்போது —

"காங்கிரஸ்- பா.ஜ.க.வுக்கு மாற்றாகத்தான் தேசிய முன்னணி உருவாக்கப்பட்டது. அதன் 71 அம்சத் திட்டத்தை ஏற்கும் எந்தக் கட்சியும் அதில் சேரலாம். ஆனால், இந்த நிமிடம் வரை தி.மு.க.தான் முன்னணியில் இருக்கிறது. புதிதாக யாராவது சேர விரும்பினால் அப்போது கட்சி மேலிடம் தன் முடிவைச் சொல்லும்" என்கிறார்.

ஆனால், வாழப்பாடிக்குப் பின்னால் வந்த குமரி அனந்தனும் சட்டமன்ற காங்கிரஸ் தலைவர் எஸ்.ஆர்.பி.யும் ஊழல் புகார்களையே அடிக்கோடிட்டுக் காட்டும்போது, எப்படி உறவைப் புதுப்பித்துக் கொள்வது என்பது காங்கிரஸ் மேலிடத்துக்குத் தலைவலிக்கும் பிரச்னை!

இதற்கிடையில் காங்கிரஸும் இந்தப் போக்குகளை உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டுதானிருக்கிறது. மத்திய உளவுத்துறை அறிக்கை, அ.தி.மு.கவுடன் கூட்டணி வைப்பதே காங்கிரஸுக்கு லாபம் தேடித்தரும் என்று சொல்கிறதாம்.

இதற்கிடையில் 'பாம்புக்குத் தலையையும், மீனுக்கு வாலையும் காட்டும் விலாங்கு மீன் போல் ஜெ, காங்கிரஸுக்கும், தேசிய முன்னணிக்கும்

என். டி. ஆரும் ஜெயலலிதாவும் நண்பர்களாகி இருக்கிறார்கள்!

தெலுங்கு தேசம் கட்சியினர், இந்தப் புதிய உறவு குறித்து மகிழ்ச்சியாகவே இருக்கிறார்கள். காங். அல்லாத மாநில அரசுகளின் ஒற்றுமைக்கு ஓர் அறிகுறிதான் ஜெ. - என்.டி.ஆரின் சமீபத்திய சந்திப்பு என்கிறார்கள். 'என்.டி. ஆருக்கு டெல்லி ஏதேனும் ஓர வஞ்சனை செய்தால், போராடுவதற்கு அம்மாவின் ஆதரவு கிடைக்குமே!' என்று நம்பிக்கையுடன் இருக்கிறார்கள்.

ஆந்திராவில் தெலுங்கு தேசம் மட்டுமின்றி, கர்நாடகத்தில் ஜனதா தளமும் வெற்றி பெற்று அரசு அமைத்தபின், தே. முன்னணியின் இமேஜ் உயர்ந்துதானிருக்கிறது. எனினும் மகாராஷ்டிரா, குஜராத், பீஹார், ஒரிஸ்ஸா தேர்தல்களின் முடிவுகளைப் பொறுத்துத்தான் தேசிய முன்னணியின் எதிர்காலமே அமையும்.

ஆனால், தே. மு.வின் தலைவர் என்.டி.ஆருக்குத் தேர்தல் பிரசாரத்தில் ஈடுபட அதிக நேரமில்லை. தற்போதைக்குத் தமது தேர்தல் வாக்குறுதிகளை நிறைவேற்றும் பெரும் பொறுப்புதான் அவரைக் கட்டிப் போட்டிருக்கிறது. முழு மதுவிலக்கு, இரண்டு ரூபாய்க்குக் கிலோ அரிசி, இரண்டையும் வெற்றியடையச் செய்யும் முனைப்பில் இருக்கையில் மற்ற மாநிலத் தேர்தல்கள் பக்கம் அவர் கவனம் திருப்ப முடியுமா?

வெவ்வேறு முகங்களைக் காட்டிக் கொண்டிருக்கிறார். யாராக இருந்தாலும், தாம் போடும் நிபந்தனைகளுக்கு உடன்படும் அணியுடன்தான் அவர் இணைவார் என்பது கடந்த கால அரசியலைப் பார்த்தால் புரிந்துவிடும். அந்தவிதமாகப் பார்க்கும்போது, முன்பு காங்கிரஸ், மத்தியிலே ஆதாயம் பெற மாநிலத்தை விட்டுக் கொடுத்தது போக, இப்போது தேசிய முன்னணி, சில மாநிலங்களில் ஆதாயம் பெற மத்திய அரசையே ஜெ.வுக்குத் தாரைவார்க்கத் தயாராகிறதா என்பதுதான் கேள்வி!

— ப்ரியன்

தெலுங்கு - கங்கை திட்டம், இந்த இரு முதல்வர்களின் நட்புறவினால் இன்னும் வேகமாக நடந்து முடியுமா? மில்லியன் டாலர் கேள்வி! ஆனால், சமீபத்தில் ஆந்திரா வந்திருந்த மேதா பட்கர், (நர்மதா பசாவோ ஆந்தோளன் அமைப்பைச் சேர்ந்தவர். நர்மதையில் புதிய அணை கட்டுவதற்கு எதிராகப் போராடி வருபவர்) தெலுங்கு - கங்கைத் திட்டம் ஒரு 'துக்ளக்' திட்டம் என்று திட்டிவிட்டுப் போயிருக்கிறார். 'ஹைதராபாத் நகரே குடிக்கத் தண்ணீரில்லாமல் காய்ந்து கொண்டிருக்க, சென்னைக்கா தண்ணீர் அனுப்பப் போகிறார்கள்?' என்று கேள்வி எழுப்பியிருக்கிறார்.

துக்ளக் திட்டமா, துரிதமாகப் பலன் தரும் திட்டமா என்று பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

இதற்கெல்லாம் நடுவே ஜெ. வந்தால் என்ன? போனால் என்ன? என்று இருக்கிறார்கள், ஆந்திர மக்கள். அவர்கள் அறிந்த இரண்டு கட்சிகள் காங்கிரஸ், தெலுங்கு தேசம். 'தேசிய முன்னணியில் யார் சேர்ந்தால் என்ன? விலகினால் என்ன?' என்று கேட்பவர்கள்.

'எங்கள் கட்சி யாருடனும் கூட்டணி நாடுவதில்லை; மற்ற கட்சியினர்தான் எங்கள் கூட்டணியை விரும்புகிறார்கள்!' என்று ஜெ. கூறுகிறாரே...! இதைப் பற்றி என்.டி.ஆர். என்ன நினைக்கிறார்...?

ஆந்திர முதல்வரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டபோது கிடைத்த பதில்:

"நோ கமெண்ட்ஸ்!"

ஹைதராபாத்திலிருந்து :

**டி.வி.முரளி மோகன்**

TV - 95

# இயற்கையைக் காண ஓர் இலவசச் சுற்றுலா!



• சீடர் மோகனகிருஷ்ணனுடன் பாலமுரளி

'ராக சுதா ரச'. இந்தத் தலைப்பில் கர்நாடக இசையும் சினிமாவும் கைகோத்துக் கொண்டு, 13 வாரங்களுக்கு ரசிகர்களைக் கட்டிப் போடப் போகிறது.

ஒரு பாதியில் கர்நாடக இசையில் ராகம் ஒன்றைப் பிரபல பாடகர் பாட, மறு பாதியில் அதே ராகத்தில் அமைந்த சினிமா பாட்டு ஒன்றின் காட்சியைக் காண்பித்து, இரண்டு வகை ரசிகர்களையும் திருப்திப்படுத்துகிறார் தயாரிப்பாளர் கோவிந்த் நல்லப்பா. இயக்குநர் : முரளி நல்லப்பா.

"முதல் எபிசோட் ஏலகிரி மலையில். காலை ஏழரை மணிக்கு, வானம் பளீரென்று இருக்கிறதே என்று பார்த்தால், ஒரு ஷாட்டை முடிப்பதற்குள் பக்கத்திலிருக்கிற ஆளை கூடப் பார்க்க முடியாதபடி பனி, போர்வையாய்ப் படர்ந்தது! சுமார் அரை ஏக்கர் பரப்பளவுக்கு, பகல் ஒளி போல் வெளிச்சம் தரும் ஸ்பெஷல் விளக்குகளைப் பொருத்தி, டீசல் ஜெனரேட்டரை ஓட்டத் தொடங்கியவுடன் -

"பனி கலைந்து மறுபடி பளீர் வெளிச்சம்! விளக்குகளை அணைத்து விட்டு இயற்கை ஒளியில் படப்பிடிப்பைத் தொடங்கினால் - அட, மறுபடி பனிமூட்டம். சரியான கண்ணாமூச்சி விளையாட்டு! ஆனால் சிலுசிலுவென்று குளிர் காற்று. கூடவே பூச் சொரிகிற மாதிரி மழைத் துளிகள். மறுபடி சூர்ய ரச்மியின் குபீர் ஒளி!" என்று படப்பிடிப்பு அனுபவங்களை விளக்குகிறார் இயக்குனர்.

முதல் எபிசோடுக்காக, சங்கராபரண ராக ஆலாபனையை பாலமுரளி பாடியிருக்கிறார்.

இது ஏற்கெனவே ஒளிபரப்பப்பட்ட 'சுவர ராக சுதா' மாதிரிதான் என்றாலும் இதில் மாறுதலாக ஒவ்வொரு வாரத்துக்கும் ஒரு ஸ்டோரி லைன்.

பாடகர் பாலமுரளி ஓய்வு எடுக்க ஏலகிரிக்கு வந்து தங்கும் போது, ஓர் இனிய குரல் அவரைக் கவர்கிறது. ஓர் இளைஞர் பாடிக் கொண்டிருக்கிறார்.

இளைஞரைச் சந்தித்துப் பேச்சுக் கொடுக்கிறார்.

"நன்றாகப் பாடுகிறாயே! யாரப்பா உன் குரு?" என்று கேட்கிறார். "என் மானசிக குரு இவர்தான்" என்று, பாக்கெட்டிலிருந்து ஒரு பழைய புகைப்படத்தை எடுத்துக் காண்பிக்கிறார், பார்வை இழந்த இளைஞர்.

படத்தில் : பாலமுரளி கிருஷ்ணா!

நடிப்பில் மட்டுமல்ல; நிஜவாழ்க்கையிலும் இந்த இளைஞர் மோகன கிருஷ்ணன் பாலமுரளியின் சீடர்; பி.காம். படிப்பை முடிக்கும் போது கண்பார்வை முழுதாகப் போயிற்று. இப்போது விஜயவாடா வானொலியில் பாடகர்!

தீட்சிதரின் 'அட்சயலிங்க விபோ' என்ற சங்கராபரண கீர்த்தனையை பாலமுரளி பாடிக் காண்பிக்கிறார். முருகன் கோயில் பின்னணி.

"இதே ராகத்தில் அமைந்த சினிமா பாட்டு தெரியுமா?" என்று கேட்டு, சினிமா பாட்டைக் காட்சியுடன் காண்பிக்க, எபிசோட் முடிகிறது. ஆனால் ரசிகர்களின் கற்பனைக்கு வேலை வைக்க, இன்னொரு படப் பாடலையும் காண்பித்து, 'இது என்ன ராகம்?' என்று ஒவ்வொரு வாரமும் யோசிக்க வைக்கிறார் இயக்குநர். 13 வார முடிவில், தேர்வு பெறும் ரசிகர்களுக்குப் பரிசுகள் காத்திருக்கின்றன!

பாலமுரளி தவிர, ராதா-ஜெயலட்சுமி, உண்ணிகிருஷ்ணன், சுதா ரகுநாதன், ப்ரியா சிஸ்டர்ஸ், ஹைதராபாத் பிரதர்ஸ் என்று பிரபல பாடகர்களின் பட்டியலே வைத்திருக்கிறார் மீதி எபிசோட்களுக்கு.

விஷுவலாகக் கண்களைக் குளிர வைக்கும் இமாசலப் பிரதேசத்தில் உள்ள குலூ-மணாலி முதல் நேபாளத்தில் பசுபதிநாதர் கோயில் வரை பல இடங்களில் படப்பிடிப்பை நடத்தப் போகிறார்களாம். பாட்டைக் கேட்டு ரசிக்கும்போதே, இயற்கையையும் ரசித்து மகிழ இலவசச் சுற்றுலா!

— சாருகேசி

புகைப்படம் : 'ட்ரிக் முரளி'

# Kalki Shopping Page

## SANTOSH SILK MILL DEPOT

**WHOLESALER**

**No. 39, GODOWN STREET, MADRAS - 600 001.**






**MANUFACTURER OF**
**SANTOSH CALASSIC SAREES**

*Our Distributors :*



## Sree Krishna

**CUT PIECE COLLECTION**
**PRIVATE LIMITED**
(wholesale & Retail)
Near Flower Bazaar Police Station
**39, GODOWN STREET, MADRAS-1 TEL : 589596**

(1) Suitings; (2) Shirtings; (3) Sarees & Matching Blouses;
(4) Dress Materials; (5) Lungies & Dhothies & Cotton Sarees.

**Special Gift for purchase above Rs. 1000/-**

---

**24% + 4% = சேமிப்பு**

## நடராஜ் ஃபைனான்ஸ்

**வழங்குகிறது**

**எங்கள் கம்பெனியின் பல்வேறு சிறப்புத் திட்டங்கள்**

- ☐ 90 நாள் டெபாஸிட் திட்டம். **24% P.A.**
- ☐ 12 மாத வட்டிக்கு வட்டி - குமுலேடிவ் திட்டம்.
- ☐ 12 மாத, மாதந்திர வட்டி பெறும் திட்டம்.
- ☐ 36 மாத இரட்டிப்புத் திட்டம்.
- ☐ எல்லாவற்றுக்கும் மேலாக, கி.பி. 2000-க்கான மிகமிக லாபகரமான டெபாஸிட் திட்டம்.
- ☐ எங்கள் சீட்டு குருப்பில் (30% சிலிங்), சீட்டு விழாதவர்களுக்கு கடன் திட்டம்.
- ☐ மாதாந்திர சேமிப்பு முறையில் 2½ கிரவுண்ட் மற்றும்; 5 கிரவுண்ட் பண்ணை வீடுகளை சொந்தமாக்கும் சுலபமான திட்டம்.

**24% P.A.**

மேலும் விபரங்களுக்கு :




**NATARAJ FINANCE & INVESTMENTS,**
**NATARAJ CHITS (TAMILNADU) Pvt. Ltd.,**
**NATARAJ ESTATES – FARM HOUSE PROMOTERS,**
"Shanthi Complex", 3rd Floor, 26, Ranganathan St., T. Nagar, Madras – 600 017
Phone : 4342098, 4840150
B.O. : 1-B, Kamarajar Road, Kanchipuram – 631 501.

வர்த்தமானன் பதிப்பகம் வழங்கும்

# முன் வெளியீட்டுத் திட்டம்

வியாசரின்

# மகாபாரதம்

இனிய எளிய தமிழ் உரைநடையில் (2ஆம் பதிப்பு) மூன்று தொகுதிகள் விலை ரூ. 300.00

# ஸ்ரீமத் பாகவதம்

இனிய எளிய தமிழ் உரைநடையில் இரு தொகுதிகள் விலை ரூ. 150.00

| | | |
|---|---|---|
| | | 450.00 |
| கழிவு 30% | | 135.00 |
| கழிவு போக சலுகை விலை | ரூ. | 315.00 |

4.3.95க்குள் அனுப்புவோர்க்கு 30% கழிவு உண்டு. அதாவது ரூ.315/— அனுப்புக. 5.3.95 லிருந்து 15.3.95க்குள் பணம் அனுப்புவோருக்கு 20% சலுகை. அதாவது ரூ. 360/— அனுப்ப வேண்டும். பணத்தினை M.O. (அ) D.D. மூலம் அனுப்புக. நூல்களை மார்ச் மாத இறுதியில் அனுப்புகிறோம். தபால் செலவினைத் தபால் காரரிடம் செலுத்தி நூல்களைப் பெறுக.

## வியாசரின் மகா பாரதம்

வேதங்களில் சொல்லப்படும் கருத்துக்கள் அனைத்தும் இதில் இடம் பெறுவதால், வியாச பாரதத்தை ஐந்தாம் வேதம் என்பர். கதையை வழங்கிய வியாசரே நூலின் இடையிடையே தோன்றி விளக்கம் தரும் சிறப்புடையது வியாச பாரதம்! நூற்றுக்கணக்கான மாந்தர்கள் உலா வரும் ஸ்வர்ண மாளிகை, வியாச பாரதம்! ஏராளமான கிளைக் கதைகளை யுடைய ஓர் ஆல விருட்சம் வியாச பாரதம்!

நள தமயந்தி வரலாறு, சத்தியவான் சாவித்திரி வரலாறு, இராமன் வரலாறு, துஷ்யந்தன்—சகுந்தலை வரலாறு போன்றவை! புகழ் வாய்ந்தவை. அரிச்சந்திரன், குசேலன், கந்த பெருமான், பரசுராமர் போன்றோர் வரலாறும் இதில் இடம் பெற்றுள்ளன.

இவை தவிர, மனித வாழ்க்கையை நெறிப்படுத்த எழுந்தது, இந்நூல்! அறவழியில் நடக்க மனிதனைச் சிந்திக்க வைக்கிறது. இன்பமும் துன்பமும் மூடரைத்தான் பற்றும்! அறிவாளிகளை அவை நெருங்கா. எக்காரணத்தைக் கொண்டும் கடவுளைக் கைவிடக் கூடாது; பயன்களைப் பாராது கடமையைச் செய்ய வேண்டும் என்பன போன்ற கருத்துக் களை உலகுக்குப் பறை சாற்றுகிறது பாரதம்! இந்நூலைப் படிப்பவர் நெஞ்சில் ஓர் அமைதி ஏற்படும். மற்றவரை ஏமாற்றக்கூடாது என்ற எண்ணம் மேலோங்கும். தன்னை ஏமாற்றாமல் இருக்க விழிப்புடன் செயல்படத் தூண்டும். உலோபம், பொறாமை, கோபம் போன்ற தீக்குணங்கள் நீங்கும். தியானம், அமைதி, அன்பு போன்ற நற்குணங்கள் துலங்கும்.

ஊழி பெயரினும் தான் பெயரா உயர்வுடைய இந்நூலில் 18 பருவங்கள் உள்ளன.

*1. ஆதிபருவம் (ஆரம்ப நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி); 2. சபா பருவம் (சபை நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி); 3. வன பருவம் (காட்டில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி); 4. விராட பருவம் (விராட நாட்டு நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி); 5. உத்தியோக பருவம் (கண்ணனுக்கு உயர்ந்த இடம் வழங்கிய பகுதி); 6. பீஷ்ம பருவம்; 7. துரோண பருவம்; 8. கர்ண பருவம்; 9. சல்லிய பருவம்; 10. சௌப்திர பருவம் (முடிவு நிலைப் பருவம்); 11. ஸ்திரீ பருவம் (பெண்களுக்குரியது); 12. சாந்தி பருவம் (அமைதி ஏற்பட்ட நிகழ்ச்சிகளைக் கூறும் பகுதி); 13. அநுசாசன பருவம் (உபதேசப் பகுதி); 14. அஸ்வமேதிக பருவம் (குதிரை யாகப் பகுதி); 15. ஆசிரமவாசிக பருவம் (துறவு வாழ்க்கைப் பகுதி); 16. மௌசல பருவம் (உலக்கையால் மாண்டதைக் கூறும் பகுதி); 17. மகா பிரஸ்தானிக பருவம் (மேலுலகம் எய்தும் பகுதி); 18. சொர்க்கா ரோகண பருவம் (சொர்க்கத்தில் ஏற்றம் உற்ற பகுதி).*

# ஸ்ரீமத் பாகவதம்

**1. பாகவதம் பிறந்த கதை**

1. பரம்பொருள் வணக்கம்; 2. வேத வியாசர்; 3. சில பாரத நிகழ்ச்சிகள்; 4. பரீட்சித்தின் வரலாறு; 5. சுக முனிவர்.

**2. நாராயணனே பரம்பொருள்**

1. பகவானின் தோற்றப் பொலிவு; 2. தத்துவங்களின் உற்பத்தி.

**3. வராக அவதாரம்**

1. விதூரருக்கு உபதேசம் செய்!; 2. பிரமாவின் சிருஷ்டி; 3. வராக யக்ரு மூர்த்தி; 4. துவார பாலகர்கள் பெற்ற சாபம்; 5. கபிலர் தோன்றினார்.

**4. நர நாராயணர்கள்**

1. பகவானின் சில அவதாரங்கள்; 2. தட்ச யாகம்; 3. துருவன் நட்சத்திரமானான்; 4. கொடுங்கோலன் மாண்டான்; 5. பிருதுவின் நல்லாட்சி; 6. பிரசேதஸர்கள்.

**5. பரதச் சக்கரவர்த்தி**

1. பிரிய விரதன் வம்சம்; 2. பரதரின் பல பிறவிகள்.

**6. தேவர், அசுரர் போர்**

1. நாராயண நாமத்தின் பெருமை; 2. வம்ச விருத்தி; 3. இந்திரன் பெற்ற சாபங்கள்; 4. சித்ரகேது; 5. நாற்பத்தொன்பது மருத்துக்கள்.

**7. பிரகலாதர் சரித்திரம்**

1. இரண்யாட்சகனின் முடிவு; 2. இரணியன் பெற்ற வரம்; 3. நாராயணனே என் குரு; 4. மனம் மாறா மைந்தன்; 5. நரசிம்ம அவதாரம்; 6. மூன்று கோட்டைகள்.

**8. வாமன திரிவிக்கிரம அவதாரங்கள்**

1. கஜேந்திர மோட்சம்; 2. பாற்கடலைக் கடைந்தனர்; 3. அசுரரை மயக்கிய அணங்கு; 4. மூன்றடி மண் கேட்டார்; 5. வேதங்களை மீட்டவித்தகர்.

**9. இராமர் பட்டாபிஷேகம்**

1. ஆண் பெண் மாறாட்டம்; 2. அசுவனி தேவர்கள்; 3. அம்பரீஷன் வரலாறு; 4. மீனால் மனம் மாறிய மகரிஷி; 5. அப்படியே நில்; 6. பகீரதன் தவம்; 7. இராமாவதாரம்; 8. புரூரவச் சக்கரவர்த்தி; 9. பரசுராமர்; 10. யயாதி மன்னன்; 11. பரதன் பிறந்தான்.

**10. கிருஷ்ணாவதாரம் (மூன்று பகுதிகள்)**

(அ) பிள்ளை விளையாட்டு (முதல் பகுதி)

1. ஒருத்தி மகனாய்ப் பிறந்து வேறொருத்தி மகனாய் வளர்ந்தார்; 2. அடுக்கடுக்காய் வந்த அரக்கர்கள்; 3. தளிர் நடையும், தளராத விளையாட்டும்; 4. மீண்டும் அரக்கர் தொல்லை; 5. அன்பர்களுக்கு அருள் செய்த அற்புதம்; 6. ஆயர்தம் கொழுந்து; 7. பட்டம் ஏற்ற பரந்தாமன்; 8. கிருஷ்ணா லீலா விநோதங்கள்.

(ஆ) கம்ச வதம் (இரண்டாம் பகுதி)

1. சில அரக்கர் மாண்டனர்; 2. நாரதர் கூறிய இரகசியம்; 3. கம்சனின் பயங்கரத் திட்டங்கள்; 4. அக்ரூரர் அடைந்த ஆனந்தக் களிப்பு; 5. மதுரையில் நிகழ்த்திய மாயங்கள்; 6. மாமனைக் கொன்ற மாமாயன்; 7. கிருஷ்ணன் தன் பிறப்பின் இரகசியம் உணர்த்தினார்; 8. குரு மைந்தனைக் கொணர்ந்த கோபாலன்; 9. கோபியர்களின் உயர்ந்த பக்தி; 10. துவாரகையை நிர்மாணித்தல்; 11. முசுகுந்தன் கண்ட காட்சி; 12. ருக்மிணியின் தூது; 13. ரதி மன்மதன் திருமண வைபவம்; 14. சத்திய பாமையை மணந்தார்; 15. மணி செய்த விந்தைகள்; 16. நரகாசுரனைக் கொன்றார்; 17. பலராமன் ருக்மியைக் கொன்றது; 18. பாணாசுரன் உயிர் தப்பினான்; 19. பௌண்டரீகன் தரித்த வேடம்;

(இ) பூபாரம் தீர்த்தல் (மூன்றாம் பகுதி)

1. பதினாறாயிரம் மனைவியர்; 2. ஜராசந்தன் மாண்டான்; 3. சால்வ யுத்தம்; 4. பல்வலனைக் கொன்ற பலராமன்; 5. குசேலர் வரலாறு; 6. தாயின் விருப்பம் தீர்த்த தயாபரன்; 7. அன்பருக்கு உதவிய ஆபத் சகாயன்.

**11. வைகுண்டம் சேர்தல்**

1. கிருஷ்ணன் உபதேசம்; 2. அவதூதர் சொன்னவை; 3. பகவான் புறப்பட்டார்.

**12. கல்கி அவதாரம்**

1. இனி நடக்க இருப்பவை; 2. பரீட்சித்தின் யாகம்; 3. பக்த மார்க்கண்டேயர்; 4. யாகம் இனிது முடிந்தது.

வேதங்களைக் கற்பக மரத்திற்கு ஒப்பிட்டால், அதில் பழுக்கும் பழத்திற்கு இந்தப் பாகவதத்தை ஒப்பிடலாம். இதனை வைகுண்டத்தில் இருந்து நாரதர் அறிந்து கொண்டார்; அவரிடம் இருந்து வியாசர் அறிந்தார்; வியாசரிடமிருந்து சுக முனிவர் அறிந்தார்; சுக முனிவர் மூலம் இது உலக மக்களிடையே பரவியது. புண்ணியவான் களாகிய நீங்களும் இந்த ருசியுள்ள இனிய பழத்தை நேரம் கிடைக்கும் பொழுதெல்லாம் புசியுங்கள்.


நான் இன்றும் காங்கிரஸில் தான் இருக் கிறேன்... அர்ஜீன்சிங்
நீ என்னைக் காரிலிருந்து இறக்கிவிட்டாலும் நான் காரை விட தயாரில்லை...
காங்கிரஸ்
அர்ஜீன் சிங்


மருத்துவக் கல்லூரிகளில் கட்டணங்கள் பெரிது உயர்வு
மாணவர்கள்
தமிழக அரசு





# கல்கி



1995
பிப்ரவரி 19
பவ
மாசி 7
மலர் : 53
இதழ் : 29

## சினிமா நகருக்கு 50 ஏக்கர்!

அண்ணா பல்கலைக் கழகத்துக்குச் சொந்தமான ஐம்பது ஏக்கர் நிலத்தை, சினிமா நகருக்கு ஜெ. தாரை வார்த்து விட்டாராம். இதைப் போய்ப் பிரமாதப் படுத்துகிறார்கள். "ஆகா! கல்வியை விடவும் சினிமா முக்கியமாகி விட்டதா?" என்று குதிக்கிறார்கள். "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" எஸ்.டி.எஸ்., எவ்வளவோ யோசனை பண்ணி பதில்களைத் தயாரித்து, அண்ணா பல்கலைக் கழகத்தின் மீதே பழி சுமத்தப் பார்த்தும் பயனில்லை! அவர் பேசப் பேச எதிர்த்தரப்புவாதங்களே வலுவடைந்தன; பாவம்!

எஸ்.டி.எஸ்.ஸுக்கு வாதத்திறன் பத்தாது. "அண்ணா பல்கலைக் கழகத்தின் நன்மைக் காகவே அம்மா இந்தக் காரியம் செய்திருக்கிறார்கள்" என்று ஒரு போடு போட்டிருந்தால், எல்லாரும் வாயடைத்துப் போயிருப்பார்கள். "பொறி இயல் படிக்கும் மாணவர்களுக்கு மட்டும் என்ன, சினிமா ஆசையே இராதா? அவர்களுக்குப் பிரபு தேவா நடனத்தைப் பார்த்து விட்டு தியேட்டரில் நாற்காலி மீது ஏறி டான்ஸ் ஆடத் தெரியாதா? மாண வர்களின் பொழுதுபோக்குக்குத்தானே சினிமா? சினிமாவுக்காகத்தானே ஐம்பது ஏக்கர் நிலம்? சினிமா பார்த்து விட்டு வந்த உற்சாகத்தில் அண்ணா பல்கலைக் கழக மாணவர் கள் நன்றாகப் படித்து, நிறைய மார்க் வாங்கி, சிறந்த இஞ்சினீயர்களாக விளங்கி, நாட்டை "ஓஹோ" என்று உன்னத நிலைக்கு உயர்த்தி விட மாட்டார்களா? இதற்குத்தானே அம்மா அஸ்திவாரம் போட்டிருக்கிறார்!" - இப்படி எஸ்.டி.எஸ். வாதாடியிருந்தால் துணைவேந்தர் துவண்டு போயிருக்க மாட்டாரா!

## ஷாக் அளித்த கட்டண உயர்வு!

"பதினோரு மாதங்கள் முடியுமுன் மறுபடி கடுமையான மின்கட்டண உயர்வால், மத்தியதர மக்கள்தான் அவதிப்படப் போகிறார்கள்" என்று எல்லா எதிர்க்கட்சிகளும் அலறுகின்றன. "தொழிற்சாலைகளுக்கான மின்கட்டண உயர்வால் விலைவாசிகள் உயரும்" என்றும் எடுத்துக்காட்டுகின்றன. ஆனால் உண்மைகளைச் சந்திக்கும் திராணி ஆட்சிக்கும் இல்லை; எந்த எதிர்க்கட்சிக்கும் இல்லை.

மின்வாரியத்துக்கு ஆண்டுதோறும் ஏற்படும் நஷ்டம் ரூ. 650 கோடி. இதில் பாதி அளவைத்தான் இப்போதைய மின்கட்டண உயர்வு ஈடுகட்டும். ஆனால் விவசாயிகளுக்கு இலவச மின்சாரம் காரணமாக மின்வாரியத்துக்கு ஏற்படும் வருவாய் இழப்பு ஆண்டு ஒன்றுக்கு ரூ. 1200 கோடி! இந்த வருவாய் இழப்பைத் தவிர்த்தால் இப்போதைய மின் கட்டண உயர்வுக்கு அவசியமே இல்லை; குறைக்கக் கூட செய்யலாம்!

இந்த வருவாய் இழப்பை யார் ஈடுகட்டுகிறார்கள்? சினிமா தியேட்டர்கள் அல்ல. அவர்களுக்கு கட்டணத்தைக் குறைத்துப் புண்ணியம் கட்டிக் கொண்டிருக்கிறார் முதல்வர். மத்தியதர வகுப்பினர், சிறிய - பெரிய தொழிலகங்கள், ஆஸ்பத்திரிகள், அனாதை இல்லங்கள், முதலிய எல்லாவற்றுக்கும் கட்டண உயர்வு! அப்படியும் பகுதி அளவில்தான் இந்த இழப்பு ஈடுகட்டப்படுகிறது. மிச்சம் பொது பட்ஜெட்டில் அனைவர் முதுகிலும் சுமத்தப்படுகிறது. அந்த அனைவரில் விவசாயிகளும் அடக்கம்தான்!

தவிர, மின் விநியோக இழப்பு என்பது தமிழகத்தில்தான் மிக அதிகம் என்ற பெருமை நமக்கு உண்டு. திருட்டு மின்சாரம், தொழில் நுணுக்கம் அபிவிருத்தி அடையா ததால் இழப்பு என்று பலவகையிலும் ஏற்படும் விநியோக இழப்பு பதினெட்டு சதவீதம்!

ஆனால் வோட்டு இழப்பை விரும்பாத அரசியல்வாதிகள் இவை பற்றியெல்லாம் பேசவே மாட்டார்கள்.

## எம்.எல்.ஏக்கு அரிவாள் வெட்டு!

ஜெ.யுடைய பொற்கால ஆட்சியில் மீண்டும் ஒரு அ.தி.மு.க. எம்.எல்.ஏ. அரிவாள் வெட்டுக்கு ஆளாகியிருக்கிறார். (மோகனன் - ராணிப்பேட்டை தொகுதி) ஆட்சிக்கு எதிராகக் காரியம் பண்ணுகிறவர்கள் மட்டுமல்ல; ஆட்சிக்கு அடிபணிந்து போகிறவர்களும் வன்முறைக்கு இலக்காக முடியும் என்பது ஜெ. ஆட்சியின் தனிப் பெருமை!

பூவும் மணமும் போல், சந்திரனும் நிலவும் போல், கவுண்டமணியும் செந்திலும் போல் வன்முறையும் அரசியலும் கைகோத்துச் செயல்படும் நிலை, ஜெ. ஆட்சியில் காணப்படுவது போல் முன் எப்போதும் இருந்ததில்லை. இந்த வகையிலும் ஜெ. வரலாறு படைத்தவராகிறார்!

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.

# ஒரு குக்கிராமத்தில் குவிந்து கிடக்கும் பிரபலங்கள்!

கடந்த அறுபதுகளில் இளைஞர்களைக் கதிகலங்க அடித்த சோஃபியாலாரனின் வசீகர முகம்; தமது கதை சொல்லும் பாணியில் வாசகர்களின் உள்ளங்களில் திகிலை ஏற்படுத்திய ஹிட்ச்காக் முகம்; மனிதனின் முதல் காலடியாகத் தமது காலடியை நிலாவில் எடுத்து வைத்த ஆர்ம்ஸ்ட்ராங்கின் பெருமித முகம் என்று ஏராளப் பழைய முகங்களிலிருந்து இன்றைய அமெரிக்க ஜனாதிபதியான கிளின்டனின் சிரிக்கும் முகம் வரை ஏராளமான புகைப்படங்களைச் சேகரித்து வைத்திருக்கிறார் சிகாமணி.

சேலத்துக்கு அருகிலுள்ள அத்தனூர் என்னும் சிறு கிராமத்தில் வசிக்கும் சிகாமணிக்கு, உலக அளவில் பிரபலமாயிருப்பவர்களின் புகைப்படங்களைச் சேகரிக்க வேண்டும் என்கிற எண்ணம் எப்படி வந்தது?

"கிட்டத்தட்ட 25 ஆண்டுகளுக்கு முன்பு, பத்திரிகையில் பேட்டியொன்று படித்தேன். அது இந்திய நடிக - நடிகையரின் போட்டோக்களைச் சேகரிப்பவர் பேட்டி. அதில் 'நீங்கள் ஏன் உலகத் தலைவர்களின் போட்டோக்களைச் சேகரிக்கக் கூடாது?' என்ற கேள்விக்கு, 'அதற்கு ரொம்பவும் பொறுமை வேண்டும்; சிரமமும் அதிகம்!' என்று பதிலளித்திருந்தார் அவர். அதையே நான் சவாலாக ஏற்றுக் கொண்டு, உலகப் பிரபலங்களின் போட்டோக்களைச் சேகரிக்க ஆரம்பித்தேன். ஆயினும் என் முதல் முயற்சியே தோல்வியைத்தான் தந்தது..." என்று தொடர்கிறார், சிகாமணி.

"அப்போது அமெரிக்காவில் ஜனாதிபதித் தேர்தல். அதில் கென்னடியின் சகோதரர் ராபர்ட் கென்னடியும் போட்டியிட்டதைப் பத்திரிகைகளில் படித்தேன். அவரிடமே பிள்ளையார் சுழி போட நினைத்து, 'ஐயா, இந்தத் தேர்தலில் நீங்கள் ஜெயிக்கணும் என்று பிரார்த்திக்கிறேன். அதோடு உங்கள்

போட்டோ ஒன்றையும் எனக்கு அனுப்பி வைக்க வேண்டுகிறேன்' என்று அவருக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

"எனது துரதிருஷ்டம், ராபர்ட் கென்னடி சுட்டுக் கொல்லப்பட்டு விட்டார். அவரது கொலைக்கு மட்டுமின்றி இனி எனது கடிதத்திற்கும் பதில் வராதே என்று நான் வருத்தப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் ஒரு கடிதம். அதில் ராபர்ட் கென்னடியின் புகைப்படத்தோடு, அவரது இன்னொரு சகோதரரான எட்வர்ட் கென்னடி தமது கைப்பட எழுதிய கடிதமும் இருந்தது! பிறகென்ன? எந்த முயற்சிக்கும் பயனில்லாமல் போகாது என்று எனது முயற்சியை உற்சாகத்தோடு தொடர ஆரம்பித்து விட்டேன்."

எல்லோருமே உடனடியாகப் புகைப்படங்களை அனுப்பி விடுகிறார்களா என்ன?

"சிலர்தான் உடனே அனுப்புவார்கள். சிலருக்குப் பல தடவை எழுத வேண்டி வரும். உதாரணத்திற்கு ஹாலிவுட் நடிகர்கள் சின்கானரிக்குப் பதினேழு தடவையும் ரிச்சர்ட் பார்ட்டனுக்குப் பதின்மூன்று தடவையும் எழுதித்தான் பெற வேண்டியிருந்தது. இதில் இன்னொரு சுவாரஸ்யமான சம்பவமும் நடந்திருக்கிறது....

"நான் சோஃபியா லாரனுக்கு எழுதிய கடிதம், எப்படியோ தவறுதலாக அவரது திரையுலக எதிரியான ஜீனா லோலா பிரிகிடாவுக்குக் கிடைத்து விட்டது. ஆயினும் அவர் பெருந்தன்மையுடன், 'உங்கள் கடிதம் தவறுதலாக எனது பார்வைக்கு வந்து விட்டது. எனினும் எனது புகைப்படத்தை உங்களுக்கு அனுப்புகிறேன்' என்று அனுப்பியிருந்தார்!" என்று கூறும் சிகாமணி, தமது சாதனையாகவும் ஒன்றைக் குறிப்பிடுகிறார். அதுதான் மார்ஷல் டிட்டோவின் புகைப்படத்தைச் சேகரித்தது.

"பொதுவாகவே நமது கடிதங்களுக்குக் கம்யூனிச நாடுகளின் தலைவர்கள் அசைந்து கொடுக்க மாட்டார்கள். ஆயினும் யுகோஸ்லாவியாவின் அதிபர் மார்ஷல் டிட்டோவின் முகம் என்னை ரொம்பவும் கவர்ந்த முகமாக இருந்ததால், அவரது போட்டோவை எப்படியாவது வாங்கியே தீருவது என்று கங்கணம் கட்டிக் கொண்டு கடிதத்துக்கு மேல் கடிதமாக விடாமல் எழுதினேன். கடைசியில் அதிபர் மாளிகையிலிருந்து எனது விடாமுயற்சியைப் பாராட்டிக் கடிதமும் டிட்டோவின் புகைப்படமும் வந்து சேர்ந்தன!" என்கிறார்.

கடைசியில், "கம்யூனிச அதிபர் மாளிகையிலிருந்து எனக்குப் பாராட்டுக் கடிதம் வந்த போதிலும் ஆரம்பத்தில் என் மனைவியிடமிருந்து எந்தவிதமான பாராட்டுதலும் கிடைக்கவேயில்லை. பல்வேறு தலைவர்களின் புகைப்படங்களும் கடிதங்களும் வருவதைப் பார்த்த அவள் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் எனது முயற்சிகளைப் பாராட்ட ஆரம்பித்தாள். இதுதானே மிகப் பெரிய சாதனை!" என்கிறார், சிரித்துக் கொண்டே!

– சத்தியப்பிரியன்

### அடக்கம் அமரருள் உய்க்கும்

LONG WALK TO FREEDOM
NELSON MANDELA

**1990** பிப்ரவரியில் விடுதலை பெற்ற நெல்சன் மண்டேலா, முப்பதாண்டு சிறைவாசத்துக்குப் பின் தமது மக்களிடம் முதன் முதலாகப் பேசிய போது தமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை விவரித்து விட்டுக் கூறுகிறார் :

"எடுத்த எடுப்பிலேயே என் மக்களுக்கு நான் சொல்ல விரும்பியது என்னவென்றால் நான் ஓர் அவதார புருஷனல்ல, ஒரு சாமானியனே; அசாதாரணமான சந்தர்ப்ப சூழ்நிலைகள் என்னைத் தலைவனாக்கியுள்ளன என்பதுதான்!"

(நியூஸ்வீக் - நெல்சன் மண்டேலாவின் சுயசரிதை விமர்சனத்தில்)

## அடுத்த இதழில்....

●● தினம் ஒரு கோவில்; தினம் ஒரு கொள்ளை!

– சிறப்புக் கட்டுரை

●● 1995 - ஒரு மீசையின் கதை

●● மெட்ராஸை சுற்றிப் பார்த்தோம்!

– ஒரு வித்தியாசமான அனுபவம்!






# பூமி கேஸ்

இன்றே பெறலாம்
முன்பதிவு செய்ய
தேவை இல்லை



2வது பாட்டிலிங் பிளாண்ட் துவக்க விழாவில் செவாலியர் திரு. சிவாஜிகணேசன், பூமி பாட்டிலிங் கேஸ் கம்பெனியின் சேர்மன் & மானேஜிங் டைரக்டர் திரு. K.V.P. பூமிநாதன், MRL சேர்மன் திரு. S. இராமலிங்கம், அருணா குருப் அதிபர் திரு. P. மருதப்பிள்ளை, MRL பைனான்ஸ் டைரக்டர் திரு. T. நாகநாதன், டாக்டர் நல்லி குப்புசாமிசெட்டி, லீகல் அட்வைசர் திரு. P. ஜோதிமணி, எஸ்ஸார் கம்பெனி அட்வைசர் திரு. D.H.P. இரத்தினசாமி.

இந்தியாவிலேயே இரண்டு மாபெரும் கேஸ் பாட்லிங் பிளாண்ட்டுகளைக் கொண்ட ஒரே நிறுவனம்.

தட்டுப்பாடில்லாத விநியோகம். ISI முத்திரை பெற்ற உயர்தர ஸ்டீல் மற்றும் கேஸ் சிலிண்டர்கள் - பாதுகாப்பானது - பயன்படுத்த சுலபமானது.

திறமை வாய்ந்த டிஸ்ட்ரிபியூட்டர்கள் மற்றும் டீலர்களைக் கொண்டது பூமி கேஸ் நிறுவனம். விற்பனைக்கு பிறகும் சிறந்த சேவை செய்கிறது.

**11, 12** மற்றும் **17** கிலோ அளவுகளில் கிடைக்கும். விபரங்களுக்கு அருகாமையிலுள்ள டீலர்களையும் எங்களது தலைமை அலுவலகத்தையும் அணுகவும்.




## பூமி பாட்டிலிங் கேஸ் கம்பெனி (பி) லிமிடெட்

*648, அண்ணா சாலை, சென்னை - 600 006. தொலைபேசி : 8273863 ஃபேக்ஸ் : 8278185*

டீலர்கள் இல்லாத ஊர்களில் டீலர்ஷிப் பெற தொடர்பு கொள்ளவும்.

'உங்கள் பழைய தோசைக் கல்லைத் தூக்கி எறியுங்கள்; கொலஸ்ட்ராலுக்கு குட்பை சொல்லுங்கள்; துளியே துளி எண்ணெய் விட்டு பேப்பர் ரோஸ்ட்டை வீட்டிலேயே செய்யலாம்!' என்றெல்லாம் விளம்பரங்கள் முழங்குகின்றன. மாடர்ன் சமையலறைகளின் ஓர் அங்கமாகி விட்ட non-stick பாத்திரங்களுக்குத்தான் இந்த விளம்பரம்.

இந்தப் பாத்திரங்களுக்கு ஒட்டாத தன்மையை அளிப்பது 'டெஃப்லான்' என்ற ஒரு வகை திடப் பொருள். டெட்ரா ஃப்ளூரோ எதிலின் என்ற வாயுவிலிருந்து இதை ரசாயன முறையில் தயாரிக்கிறார்கள். உலகின் மிக வழுக்கலான பொருள் இதுதான்.



# சமையலறையில் ஒரு தாமரை இலை!

அதனால்தான் இதைக் கொண்டு உட்பூச்சு அளிக்கப்பட்ட பாத்திரங்களில் உணவு ஒட்டாமல் சமைக்க முடிகிறது. குறைவாக எண்ணெய் உபயோகித்து முறுகலாக 'ரோஸ்ட்' செய்ய முடிகிறது. பண்டங்கள் தீய்ந்து போவதில்லை.

"தாமரை இலையின் ஒட்டாத் தன்மை பெற்ற டெஃப்லான் உண்மையில் 'டஃப் (tough) லான்!'" என்கிறார் ஐ.ஐ.டி. ரசாயனத் துறையின் உதவிப் பேராசிரியர். ஜி.சுந்தர்ராஜன்.

"30.5° சென்டிகிரேட்தான் அதன் உருகு நிலை. அதனால் எக்கச்சக்கமான சூடு தாங்கும். அடுப்பிலிருந்து வாங்கிக் கொள்ளும் சூட்டை, சமையல் பண்டங்களுக்கு வேகமாகவும் சீராகவும் பரப்பும்.

"இந்தக் 'கல்யாண' குணங்கள் இருப்பதால்தான் டெஃப்லானை பொறியியல் துறையினரும் நாடுகிறார்கள். மின்சார ஒயர்களுக்கு இன்சுலேஷன் அளித்தல், காட்டமான அமிலங்களைப் பாதுகாத்தல் போன்ற பணிகளுக்கும் அது உபயோகமாகிறது.

"நான் மேல் படிப்புக்காக அமெரிக்கா போன போதே (1978) டெஃப்லான் பாத்திரங்கள் அங்கு விற்பனைக்கு வந்திருந்தன. சமீபத்தில்தான் அவை நம் நாட்டில் பிரபலமாகியுள்ளன. ஆனால் இப்போது மேல் நாட்டவர் டெஃப்லானை மிக அவசியமானாலன்றி உபயோகிக்கக் கூடாது என்று தீர்மானித்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை! காரணம், அதை உற்பத்தி செய்யும் போது ஓஸோன் படலம் பாதிக்கப்படுகிறது. ஃப்ளோரின் கலந்த எந்தப் பொருளை உற்பத்தி செய்யும்போதும் இப்பிரச்னை எழும். அதனால் ஃப்ளோரினுக்கு மாற்றாக வேறு எதை உபயோகிக்கலாம் என்று ஆராய்ச்சி கூட நடக்கிறது..." என்கிறார் சுந்தர்ராஜன்.

—அருண் சரண்யா

வண்ணப் படம்: யோகா



உணர்ச்சி வடிவம் கொண்ட சில மாதிரி காட்சிகள்...

## டிரெண்ட் மாறிப்போச்சு

சமூகத்தின் நடவடிக்கைகள், பழக்கவழக்கங்கள் மற்றும் முக்கியத்துவங்கள் காலங்காலமாக எவ்வாறு தத்ரூபமாக மாறிவருகிறது என அறியும் திரைப்பார்வை. நீதி மன்றங்கள் எவ்வாறு அடிப்படை அதிகார வர்க்கங்களாக இருந்து தற்போது நடைபற்ற தர்க்கங்கள் புரியும் பொது மன்றங்களாக மாறி இருக்கின்றன என்பதை பாருங்கள்.




கங்கை அமரனின் விந்தையான நிகழ்ச்சி. அதில் அவர் திரைப்படங்களின் பாடல் காட்சிகளை முற்றிலும் புதுமையான புதிய இசையை உற்பத்தியாக்க உபயோகித்துள்ளார்.




நம் எல்லோரையும் பாதிக்கும் அரசியலைப்பற்றி உல்லாசமான மற்றும் கேலி பார்வை. மாக் அசெம்பிளி நிகழ்ச்சியில் சட்டசபைகள் போன்ற பல அமைப்புகளின் நடைபெறும் பொது நடவடிக்கைகள், மற்றும் அங்கு நடைபெறும் வியாபாரங்களைப்பற்றி நகைச் சுவையுடன் நடித்துக் காண்பித்துள்ளார்கள்.

## கதை விடும் நேரம்

பல திரைப்படங்களிலிருந்து பெற்ற காட்சிகள் ஒரு புதிய திரைப் படத்தை படைப்பதற்கு ஒன்றாக இணைக்கப்பட்டிருக்கிறது. இதன் விளைவாக வியப்பூட்டும் கூட்டணியான ரஜினிகாந்த், சிவாஜி கணேசன், ஜெமினி கணேசன், கமலஹாசன், சாவித்திரி, சுகன்யா, ரேகா, மீனா போன்ற பல நட்சத்திரங்கள் ஒரே திரைப்படத்தில் இணைந்து நடிக்கிறார்கள். கதை வடிவம் திருப்பங்களுடன், மாற்றங்களுடனும் அமைந்திருக்கிறது.

## ஈகிள் GEC க்விஸ்

புதுமையான முறையில் புதிர்ப் போட்டி. பங்கேற்பாளர்கள் நான்கு பிரிவுகளாக பிரிக்கப்படுவார்கள். அவற்றில் இரண்டு பிரிவுகளில் கல்லூரி மாணவர்களாகவோ, அல்லது பட்டதாரி இளைஞர்களாகவோ இருப்பார்கள். மற்ற இரு பிரிவிலும் கல்லூரிக் கல்வியடையாத இயந்திர தொழில் நிபுணர்கள், கைத்தொழில் வல்லுநர்கள், தச்சர்கள், விவசாயிகள், மின்சம்பந்த தொழிலாளிகள் அடங்குவார்கள். வினாக்கள் இருபிரிவினரும் சமமான சந்தர்ப்பங்களில் சமமான மதிப்பெண்ணை பெறும் வாய்ப்புடைய வகையில் வடிவமைக்கப்பட்டிருக்கும்.


சோ ராமசாமி


கங்கை அமரன்

### திறமையாளர்களையும் போட்டியில் விருப்பமுள்ள போட்டியாளர்களையும் அழைக்கிறோம்.

நடிகர்கள் வசனகர்த்தாக்கள், இயக்குனர்கள், மற்றும் இந்த புரட்சியில் பங்கேற்க விரும்பும் பல திறமையாளர்களையும் எங்களை உடனடியாக தொடர்பு கொள்ளுமாறு அழைக்கிறோம்.

மற்றவர்களும் எங்களுடைய நிகழ்ச்சிகள், பட்டிமன்றங்கள் புதிர் நிகழ்ச்சிகள், மாக் அசெம்பிளி அல்லது எந்த நிகழ்ச்சிகளிலாவது பங்கு கொண்டு மகிழ்வுற எண்ணினால் 10 தினங்களுக்குள் கீழ்கண்ட முகவரியில் எங்களை தொடர்பு கொள்ளவும்.

எங்களை தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

கோல்டன் ஈகிள் கம்யூனிகேஷன்ஸ், விருந்தாவன், 9, III அவென்யூ, போட் கிளப் சாலை, சென்னை 600 028. போன் 450227.

# பூனைகள் ராஜ்ஜியம்




அலைகளின் ஆரவாரம் வித்தியாசமாக ஒலித்து விடியலை உணர்த்தியது. எழுந்திருக்கத்தான் மனமில்லை. சங்கையா கிழிசல் கம்பளியை இழுத்துப் போர்த்திக் கொண்டு சுருண்டான்.

குடிசைக்கு வெளியே பூனை ஒன்று 'ஊஊ...ஊஊ...ஊஊ...ஊஊ..' என்று குழந்தை போலச் சிணுங்கி அழுதது. "அடி. செருப்பால! சனியன்!" என்று வைத மங்கா, புரண்டு படுத்தாள்.

"உனக்கு ஒரு கல்யாணமாகி, குழந்தை அழுதுச்சுன்னா 'சனியன்'னு திட்டுவியா? சர்க்கரைக் கட்டின்னு கட்டி அணைச்சுப்பியா?" என்று கேட்டவாறு போர்வையை உதறி விட்டு சங்கையா எழுந்தான்.

வலையை அள்ளி, உதறி, தோள் மேல் போட்டுக் கொண்டு, "மங்கா! போய் வாரேன். கதவைத் தாள் போட்டுக்க" என்று கூறிவிட்டு வெளியேறினான்.

மணற்பரப்பில் நடந்து கடலோரத்தை நெருங்கிய போது, வானம் குளித்து முடித்து விடியற்காலை பூஜைக்குத் தயாரானது போல் கீழ் வானில் விபூதி தரித்து ஒளிர ஆரம்பித்திருந்தது.

சங்கையா கட்டு மரத்தில் வலையைச் சுருட்டி வைத்துவிட்டு, கரைப்பக்கம் நின்று, கடற்பக்கமாகத் தன் வாழ்க்கையின் ஆதாரத்தையே தள்ள ஆரம்பித்தபோது, தூரத்தில் கடலில் விளக்கொளி தெரிந்து முன்னேறவும் செய்தது.

'நமக்கென்ன? நம்ம காரியத்தைக் கவனிப்போம்' என்று அறிவு கூறியபோதிலும் இயற்கையான ஆவல் குறுகுறுப்புடன் சங்கையா நின்றான். "சக் சக் சக் சக்" என்று விசைப் படகின் ஒலி, தெளிவாக அலை கடல் இரைச்சலுக்கும் மேலே கேட்டது. முன்னேறி வந்த ஒளி ஓரிடத்தில் நின்று விட்டது. அதற்கு மேல் கரையை நெருங்கினால் மணலில் சிக்கும். படகிலிருந்து இரு நிழலுருவங்கள் இறங்கி, மார்பளவு நீரில் நடந்து, கரையை நோக்கி வந்தன. கரங்களை உயர்த்திப் பிடித்திருந்தார்கள். அதில் சுமந்த வாட்டர் புரூப் பாக் பம்மியிருந்தது. அனுபவப்பட்டவர்கள். தடுமாற்றமின்றி நடந்து, சீக்கிரமே கரையை நெருங்கி விட்டார்கள்.

இதற்குள் விசைப்படகு திரும்பிச் சென்று விட்டிருந்தது. விளக்கொளியும் தெரியவில்லை. "சக்சக்" ஓசையும் கேட்கவில்லை.

அவர்களைக் கவனிக்காதவன் போல் அல்லது கவனித்தும் 'தனக்கென்ன போச்சு' என்பது போல் இவன் கடமையில் இறங்கினான்.

"இந்தாங்க...."

"ஏன் சாமி?"

"வீடு பக்கமா?"

"ஆமா குப்பத்துல..."

"அழைச்சிட்டுப் போறது, உடை மாத்தணும்... தாகத்துக்கு ஏதும் கிடைக்குமா?"

"மோர்த் தண்ணிதான்."

"நட."

அவன் சம்மதத்துக்குக் காத்திராமல் உத்தரவிட்டு உடன் நடந்தார்கள். கீழ்ப்படிவது தவிர வேறு வழியில்லை - புரிந்தது.

வீட்டுக்குப் போனதும் திரை மறைவில் உடை மாற்றினார்கள். ஈரம் சொட்டிய உடைகளை மங்காவிடம் தந்தார்கள். அவள் வெளியே எடுத்துச் சென்று பிழிந்து மணலில் உலர்த்தினாள். நீராகாரம் கொடுத்தாள்.

நீல நிற 'டெனிம்', பழுப்பு நிற 'விண்ட் சீட்டர்' அணிந்திருந்தார்கள். 'ஜிப்' கழுத்து வரை உயர்ந்திருந்தது. குளிருக்கு அடக்கமாக. 'வாட்டசாட்டமா, அழகா இருக்காங்க' என்று எண்ணினாள்.

"சங்கையா! தாங்க வந்த விவரம் யாருக்

கி. ராஜேந்திரன்

கும் தெரியக் கூடாது."

"நான் யாருகிட்ட போய் சொல்லப் போறேன்" என்றான்.

"ஏற்கெனவே குப்பத்துல எல்லாருக்கும் தெரியும். நான் துணி உலத்தறதை ராஜாத்தி பார்த்துக்கிட்டிருந்தா. விடிஞ்சிருச்சுல்ல" என்றாள் மங்கா.

"குப்பத்துக்குத் தெரிஞ்சா பரவாயில்ல."

"உங்கள் மாதிரி பலபேரைப் பார்த்து அனுபவப்பட்டவங்கதான்."

"அதனாலதான் சொல்லுறோம். பரவால்ல. ஆனா போலீஸுக்கு விஷயம் எட்டக் கூடாது. எட்டினா...."

ஒருவர் மங்காவின் முகவாயை அழுந்தப் பிடித்து உயத்தினான். "உன் முகம் பாழாயிடும். ஆஸிட் பல்பு தெரியுமா?"

"வாழ்நாளெல்லாம் அப்பனும் மகளும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்து பரிதாபப் பட்டுக்கிட்டிருப்பீங்க!"

திரும்பவும் பேச முடிந்ததும் மங்கா கேட்டாள்! "நீங்க அயல் நாடா? பாஸ்போர்ட் போர்ஜரியா?"

"விசா, பாஸ்போர்ட் இருந்தா, போர்ஜரியானா கூட திருச்சி அல்லது மெட்ராஸில பிளேன்ல போய் இறங்குவமே!"

"அப்ப நீங்க புலியா?"

"இல்லே, பூனைங்க!"

"அது இங்க நிறைய இருக்கு. இன்னிக்குக் காலைல கூட பூனை அழுதுதான் என்னை எழுப்பிச்சு."

"அதிராமபட்டினத்திலிருந்து தஞ்சாவூருக்கு பஸ் இருக்கா?"

"ஓ! பட்டுக்கோட்டை, மன்னார்குடி, தஞ்சாவூர்."

"அப்புறம் ரயிலேறிடுவோம்."

குளிருக்குக் குளிர்; வெய்யிலுக்கு வெய்யில். விடிந்து சற்று நேரத்துக்கெல்லாம் உடை காய்ந்து விட, கருட்டி டிராவல் பேகில் அடக் இக் கொண்டு புறப்பட்டனர்.

"சங்கையா! இன்னிக்கு பொழப்பு கெட்டு



இந்தியா-பாகிஸ்தான் போரில் பூஞ்ச் பகுதியில் செகண்ட் லெப்டினென்ட் வைத் என்னும் பஞ்சாபி இளைஞன் (வயது 23) வீரமரணம் அடைந்தான். அவனுடைய டயரியைப் புரட்டியதில் ஒரு பக்கத்தில் இப்படி எழுதியிருந்தான்:

- நான் முன்னேறினால் தொடர்ந்துவா.
- நான் சரணடைந்தால் என்னைச் சுட்டுவிடு.
- நான் இறந்தால் விட்டுச் சென்று விடு.

— 'பொது அறிவுச் செய்திகள்' நூலிலிருந்து பா. குணா.

தில்லே எங்களால..." "இந்தா," ஓர் ஐம்பது ரூபாய் நோட்டு நீள, சங்கையா கை ஏந்து முன்னர், "நாங்க பிச்சைக்காசு வாங்கறதில்லை" என்று வெடித்தாள் மங்கா. சங்கையாவின் ஏமாற்றம் முகத்தில் தெரிந்தது.

நோட்டு மறுபடி பைக்குள் போய்விட, "ரோஷக்காரி! அப்படித்தான் இருக்கணும்!" என்று பாராட்டி விட்டு நடந்தார்கள்.

மணல் பாங்கான பூமியில் சவுக்குத் தோப்பு இடையே ஒற்றையடிப்பாதையில் அதிராமபட்டினம் நோக்கி நடக்கும் போது, "போலீஸ்ல சொல்லாம விடமாட்டா அந்தப் பொண்ணு. அப்பன் பயந்தாலும் இவ நச்சரிப்பா" என்றான்.

"அதானே நம்ம நோக்கம்."

கும்பகோணம் டி.எஸ்.பி. ஃபோன் போட்டு விவரம் தெரிவித்த போது, சென்னை டெபுடி கமிஷ்னர் கடுகடுத்தார்.

"அங்கேயே வளைச்சுப் போடறதுக்கு என்ன?"

"அப்பன்காரன் பயந்துட்டான், ஸார். பொண்ணு தைரியம் சொல்லி அதிராமபட்டினம் போலீஸ் ஸ்டேஷனுக்கு அவனை இழுத்திட்டு வரதுக்குள்ளே இவங்க ரயிலேறியாச்சு?"

"எந்த ரயில்?"

"யாருக்குத் தெரியும்?"

"டிஸ்கிரிப்ஷன் கொடுங்க."

கொடுத்தார்.

"ஓகே. எல்லாத்தையும் எங்க தலைலயே கட்டுறீங்க. பார்க்கறோம்." ஃபோனை வைத்தார். "ராஜ்கமல்!"

"எஸ் ஸார்!"

"எக்ஸ்டன்ஷன்ல கேட்டுட்டிருந்தீங்கல்ல? ஸ்டேஷனுக்கு ஆள் அனுப்புங்க. வரவேற்பு விழா நடத்தி ஃபைவ் ஸ்டார் ஓட்டலுக்கு அழைச்சுப் போங்க."

"என்ன காரணம் சொல்லி அரெஸ்ட் பண்றது ஸார்?"

"காரணம் எதுக்குப்பா? தடா இருக்குல்ல!..."

"அது கலபமா இருக்கலாம்; ஆனா புத்திசாலித்தனமா இருக்குமா ஸார்?"

"ஏன்யா, என்னை மடையன்னு சொல்றியா?"

"நோ ஸார். அவங்க நம்மை விட கெட்டிக்காரங்கன்னு சொல்றேன். ஆட்கள் அடையாளம் தெளிவா இருக்கு; ஒப்பனா வராங்க, எதுக்கு?"

"'டிகாயா' இருப்பாங்க ஸார். இவர்களை மாதிரி இன்னும் ரெண்டு பேர் வேற இடத்திலே கரை இறங்கி வரலாம்."

"வந்துட்டுப் போகட்டும்."

"இவங்களைப் பிடிச்சா அவங்க செய்யப் போற காரியத்தைத் தெரிஞ்சுக்கவே முடியாம போகலாம்."

"தெரிஞ்சு என்னய்யா ஆகணும்."

"என்ன ஸார், இப்படி கேட்டுட்டீங்க? சந்திரிகா அமைதிப் பேச்சு வார்த்தை ஆரம்பிச்சிருக்காங்க. பிரபாகரன் சந்தோஷமா இருப்பதாகச் செய்தி. யாழ்ப்பாணத்துக்கு நாலாயிரம் கோடி கிடைக்கப் போகுது. இதெல்லாம் பிடிக்காதவங்க புலிகளிலேயே சிலர் இருக்கலாம்."

"இருந்துட்டுப் போகட்டும்."

"அவங்கள்ல சிலர் இங்க வந்து ஒரு பெருந் தலைவரைத் தீர்த்துக் கட்டறதா வைச்சுக்குங்க...."

"யோவ்! என்ன... நாவல் எழுதவா போலீஸ்ல சேர்ந்தே?"

"யோசிங்க ஸார். உடனே இந்தியா இலங்கைக்கு பிரஷர் இருக்கும்.. பேச்சு வார்த்தை தடைப்படலாம்... அவசரப்பட்டு இவங்களை அரெஸ்ட் பண்றது நல்லதா, இவங்க திட்டத்தைப் புரிஞ்சுக்கப் பார்க்கிறது நல்லதா?"

"என்னமும் பண்ணு! கேஸை உன்னிடம் ஒப்படைச்சாச்சு. ஏற்கெனவே அதலபாதாளத்துல இருக்கிற போலீஸ் இமேஜை இன்னும் கெடுக்கவா முடியும்?"

"முயற்சி பண்றேன் ஸார்!" என்று ஸீரியஸாகக் கூறி விட்டு வெளியேறினான் ராஜ்கமல்.

அடையாளங்களை வைத்து அவர்களைக் கண்டு கொள்வதும் 'ஃபாலோ' செய்து போவதும் கஷ்டமாக இருக்கவில்லை. விண்ட் சீட்டரின் ஜிப்பை இறக்கிக் கையை உள்ளே விட்டால் இடது கட்கத்தில் உறைக்குள் தொங்கும் பிஸ்டலை இருவருமே வினாடிப் பொழுதில் வெளியே எடுக்க முடியும் என்பது புரிந்தது.

சிந்தாதரிப்பேட்டையில் ஜாதிப் பெயரை முழுங்கி விட்டதால் வெறும் தெருவாக மட்டுமே இருந்த சந்தில், ஒரு நாலு மாடி கட்டடத்தின் முன் ஆட்டோ நிற்க,

ராஜ்கமல் போலீஸ் மாருதியில் உஷாரானான்.

நோட்டம் பார்த்து, மஃப்டியில் இருந்த ஸி.ஐ.டியை அனுப்பி, தவறான ஃப்ளாட்டில் மணி அடித்து விட்டது போல் 'ஸாரி' சொல்லச் சொல்லி, இரண்டாம் மாடியில் எட்டாம் நெம்பர் ஃப்ளாட்டில் அவர்கள் தங்கியிருப்பதை உறுதி செய்து கொண்டான். 'ஃப்ளாட் யாருக்குச் சொந்தம்?'

"ஸி.ஐ.டி. லோகனை அவங்க பார்த்துட்டாங்க. அதனால வாக்கி டாக்கியோட வேற ரெண்டு பேரை அனுப்புங்க'' என்று ஃபோன் செய்து டி.ஸி.யைக் கேட்டுக் கொண்ட போது, அவர் எரிந்து விழுந்தார்.

"இங்க வி.ஐ.பி. ஸெக்யூரிட்டிக்கே ஆள் பத்தலை; நீ வி.பி. ஸெக்யூரிட்டிக்கு ஆள் கேட்கிறயே?''

"யாரு ஸார் வி.பி.?''

"விடுதலைப் புலி.''

"இதுவும் இம்பார்ட்டண்ட்ன்னு நினைக்கிறேன், ஸார்!''

"செய், செய்! இந்தக் கேஸில் ஜெயிச்சதும் உன்னை ஐ.ஜி. ஆக்கிடப் போறாங்க, ஸி.எம்!''

**ரா**ஜ்கமலைத் தடுக்க முடியாது என்று தீர்மானித்த டெபுடி கமிஷ்னர், ஒரு பெரு மூச்சோடு அவன் கேட்ட உதவியாளர்களை அனுப்பினார். காத்திருந்து, கார்னர் ஃப்ளாட் அடையாளம் காட்டி, ஆட்களின் வர்ணனை, கம்ப்யூட்டர் ஸ்கெட்ச் எல்லாம் தந்து, விடை பெற்றான், ராஜ்கமல். "ஜாக்கிரதை சசி! வெளியே போனாங்கன்னா ஃபாலோ பண்ணுங்க; உடனுக்குடன் என்னைத் தொடர்பு கொள்ளணும், கண்ட்ரோல் ரூம் மூலமா, புரியுதா?''

"யெஸ் ஸார்!''

இரவு ஒன்பதரை வரை ஒரு செய்தியும் இல்லை. ஒன்பதே முக்காலுக்கு வெளியேறி, ஒரு மோட்டார் சைக்கிளில் அவர்கள் பயணப்பட, போலீஸ் மாருதி விளக்கு அணைத்துப் பின் தொடர்ந்தது.

பத்து நிமிஷம் சென்று ஃபோன் ஒலிக்க, ராஜ்கமல், மனைவியின் இதழ்கள் விளையாடி சூடேற்றிய காதில் ரிஸீவரை வைத்த போது சில்லென்றிருந்தது.

"ஸார் சசிவர்ணம் பேசறேன்; கிரீன் வேஸ் ரோடு போறாங்க!''

"என்னது! மினிஸ்டர்ஸ் ஏரியாவா?''

"ஆமாம் ஸார்!''

காது மட்டுமின்றி உடல் முழுவதுமே ஐஸாக உறைந்து போயிற்று ராஜ்கமலுக்கு.

(தொடரும்)



# பக்க வாத்தியம்

**சிஷ்யா**

வினோதினி தூங்கிப் போயிருந்தாள். சலனமில்லாத, ஆழ்ந்த தூக்கம். முதுகு மட்டும் மூச்சுக்கு ஏற்ப இலேசாக எழுந்து விழுவதைப் பார்த்துக் கொண்டிருந்தான், சத்யா. ஜன்னல் வழியே பவழ மல்லிகை வாசனை நுழைந்து பரவியிருந்தது. அமைதியான இருட்டு வேளை. மயக்கிய அந்த வாசனை நெஞ்சுக்குள் ஊடுருவி ஆக்கிரமித்தது.

'வினோதினியைப் போல'– சத்யாவின் உதடுகள் அவனை அறியாமலேயே இலேசான புன்னகையில் விரிந்தன.

'அது என்ன, அப்படி ஒரு ஸ்வரக் கோவை! பவழ மல்லி மரத்தை உலுக்கின மாதிரியல்லவா பொலபொலவென்று ஸ்வரங்கள் உதிர்கின்றன! விதவிதமான நளின வடிவங்களில் தாளக்கட்டுக் குள் சிறைப்பட்டு கோலம் போடுகின்றன..!'

–வினோதினியின் கச்சேரியைத்தான் இப்படி விமர்சித்திருந்தார் சி.வி.கே.

அந்த விமர்சனம் வினோதினியின் வாழ்க்கையில் இரண்டு பெரிய மாற்றங்களை ஏற்படுத்தியது:

'வளரும் கலைஞர்' என்ற வசதியான வட்டத்துக்குள் அவ்வளவு காலமாக அவளைக் கட்டிப் போட்டு வைத்திருந்த சபாக்காரர்களின் காதுகளைத் திறந்துவிட்டது. அந்த வட்டத்திலிருந்து விடுதலையாகி 'ஜில்'லென்று ஓர் உயர்ந்த ஸ்தானத்துக்கு வினோதினி சீக்கிரமே வந்தாள்.

இரண்டாவது மாற்றம், சத்யாவுக்கும் அவளுக்கும் இடையே இருந்த உறவில்... "எப்படி...? எப்படி?' ...'பவழ மல்லி மரத்தை உலுக்கின மாதிரி- ஸ்வரங்கள் பொல பொல வென்று'..." - விமர்சனத்தை ஒப்பித்த சத்யாவின் குரலில் பெருமிதம்.

வினோதினி முகம் சிவந்து, தலை குனிந்து கொண்டாள். சத்யாவுக்கு இது புதுசாக இருந்தது.

"என்ன வினோதினி?"

"இல்ல.. இவ்வளவு சரியா வார்த்தைக்கு வார்த்தை நினைவிருக்கா...?"

''சுலபத்துல மறக்கற மாதிரியா எழுதியிருக்கார் சி.வி.கே...?''

"அடுத்த வரிகளும் நினைவிருக்கா...?"

"பொல பொலவென்று ஸ்வரங்கள் உதிர்கின்றன....."

சத்யாவின் வார்த்தைகளை வாங்கிக் கொண்டு தொடர்ந்தாள் வினோதினி:

"விதவிதமான நளின வடிவங்களில் தாளக் கட்டுக்குள் சிறைப்பட்டுக் கோலம் போடுகின்றன...! சத்யா! உன் வாசிப்பு கச்சிதமா இருக்கிறதாலதான் என்னால இப்படிப் பாட முடியறது. மிருதங்கம் மட்டும் இடைஞ்சலா இருந்தா என்னால பாட முடியுமா...?"

"இடைஞ்சலா இருக்கிறதுக்குப் பேரு பக்க வாத்தியம் இல்லை வினோதினி..."

பளிச்சென்று நிமிர்ந்து பார்த்தாள். சத்யாவின் கண்களில் தெரிந்த நேர்மை நெகிழ்த்தியது.

ஒரு புதிய அனுபவத்தின் விளிம்பில் இருப்பதை இருவருமே உணர்ந்தார்கள்.

இரு வீட்டாருக்கும் ஆச்சரியம். கிட்டத்தட்ட நான்கு வருடங்களாக இவர்கள் கச்சேரி மேடைகளில் இணைந்து உழைத்தவர்கள்தான் என்றாலும், ஒரு அதிகப்படி போன் இல்லை; பயணங்களினூடே ஒரு அனாவசிய சல்லாபம் இருந்ததில்லை; பார்வைப் பரிமாற்றம் கூட நட்பைக் கடந்ததில்லை... எப்படி இது நடந்தது?

"எங்களுக்கே தெரியாது; ஆனால் ஒண்ணு மட்டும் தெரியும், நீங்க எங்க கல்யாணத்துக்குத் தடை சொல்லப் போறதில்லை..." துணிச்சலாகப் பேசினான் சத்யா.

"எங்களுக்கும் சந்தோஷம்தான்பா... ஆனா..." தயங்கினார் வினோதினியின் அப்பா.

"ஏன் தயங்கறீங்க...?"

"வினோதினி மெயின் ஆர்டிஸ்ட்; சத்யா பக்கவாத்தியம். பின்னால எதுவும் மனக்கசப்பு வருமோன்னு பயமாயிருக்கு..."- பளிச்சென்று சொல்லியே விட்டார் சத்யாவின் அப்பா.

"மாமா, நான் ஒரு போதும் அப்படி நினைச்சதில்லை... நீங்களே வேணா சத்யாவைக் கேளுங்கோ...". மேற்கொண்டு பேச முடியாமல் அழ ஆரம்பித்தாள் வினோதினி.

"வினோதினி! என்ன இது...!" அவள் கைகளைப் பிடித்துக் கொண்டு சமாதானம் சொன்னான் சத்யா. பெற்றோர்கள் அருகில் இருப்பதையும் அவன் பொருட்படுத்தவில்லை.

அதற்கு மேல் ஓர் அச்சாரம் தேவைப்படவில்லை.

திருமண வரவேற்பில் கச்சேரி கிடையாது. விருந்தினர் பேசட்டும்; கை குலுக்கட்டும் குதூகலமாய் இருக்கட்டும்- அந்த இடத்தில் உயிரைக் கொடுத்து ஒருவர் பாட வேண்டாம். கல்யாண இரைச்சலோடு சங்கீத தேவதை மோத வேண்டாம்!

தம்பதிகளின் விருப்பப்படி வரவேற்பு நடந்து முடிந்தது. மாலையைக் கழற்றி, கையில் மாட்டிய நேரத்தில் கடைசி விருந்தினராக விடைபெற்றார் விமர்சகர் சி.வி.கே.

"அம்மா வினோதினி! போய்ட்டு வரேன். சத்யா! நீங்க இரண்டு பேரும் ரொம்ப துணிச்சலான முடிவு எடுத்திருக்கேள். எனக்கு அளவில்லாத சந்தோஷம். ஆனால், உலகம் உங்களை நிம்மதியா விடாது; சீண்டி வேடிக்கை பார்க்கும். இனிமேதான் நீங்க தைரியமா இருக்கணும்..."

சி.வி.கே. போய்விட்டார். கல்யாணக் களைப்போ கிறக்கமோ... அவர் வார்த்தைகள் அன்று ஒரு பொருட்டாகவே தோன்றவில்லை.

இன்றைக்குத் தோன்றின! 'உலகம் உங்களைச் சீண்டி வேடிக்கை பார்க்கும்' என்ற வார்த்தைகள் ஒவ்வொரு நாளும் நாலு முறையாவது ஞாபகத்துக்கு வந்தன.

"என்ன வினோதினி, ஆத்துலயும் உன் பாட்டுக்கு அவர் தாளமா?'' என்று உரிமையோடு கிண்டல் செய்வது போல் ஆழம் பார்த்தார்கள் உறவுக்காரர்கள்.

"ஆமாம் மாமி! பிராக்டிஸ் பண்ணும்போது மட்டும்'' என்று அவர்கள் வாயை அடைத்தாள் வினோதினி.

"நேத்து டீ.வி.யில அம்மா பாடினாங்களே, லட்சணமா எங்கண்ணே பட்றாப்பல இருந்துச்சு... பாவம், ஐயாதான் ஓரமா பூட்டாரு. கொஞ்சமாத்தான் காட்னாங்க...'' வீட்டு வேலை செய்த ராஜம்மாள் நிஜமாகவே வருத்தப்பட்ட போது, சத்யா சிரித்தான்.



"பாட்டுக் கச்சேரின்னா அப்படித்தான் ராஜம்மா... பாட்டுதான் மெயின்; மிருதங்கம், வயலின் மாதிரி வாத்தியமெல்லாம் அதுக்கு ஆதரவு..."

"அப்ப உன்னையும் நல்லா காட்ட வேண்டாமா ராஜா! அதானே நாயம்.."

விடாப்பிடியாக அடம்பிடித்தாள் ராஜம்மாள்.

கச்சேரிகளில், முன் வரிசையில் உட்கார்ந்த ரசிக மேதாவிகள் சின்ன அசைவுகளுக்குப் பெரிய அர்த்தங்கள் கற்பித்துக் கொண்டார்கள். வினோதினி பிளாஸ்கிலிருந்து வெந்நீர் எடுத்துக் குடிக்க, 'அவனுக்குத் தந்தாளா பாரு..!' என்று கிசுகிசுத்தார்கள்.

"வாசவன் கச்சேரி ஜூன் பத்து... சார் வாசிக்கணும்" என்று சத்யாவிடம் தேதி கேட்டார்கள் சபாக்காரர்கள். "மன்னிக்கணும்- அன்னிக்கு வினோதினி கச்சேரி இருக்கு- அதுக்கு வாசிக்கணும்-" என்று அவன் பதில் சொன்னபோது ஏளனப் பார்வை பார்த்தார்கள். "அட, மடையா! வாசவன் இன்னிக்கு எவ்வளவு பெரிய வித்வான்! அவருக்கு வாசிக்கற பெருமை ஒரு பக்கம்... வினோதினி கச்சேரியில கிடைக்கக் கூடியதைவிட இதுல மூணு மடங்கு அதிகமா சன்மானம் வேற... இதையே வேண்டாம்னு சொல்றதுன்னா... ஹூம் எல்லாம் தலையணை மந்திரம்தான்!" இத்தனையையும் அந்த ஒரு பார்வையே உணர்த்திவிடும்!

தினம் தினம் புதுப் புது வகையான சீண்டல்கள்; அவ்வப்போது டெலிபோனில் ரசிகர்கள் நாசூக்காக விசாரித்தார்கள்; 'உங்களிடையே எல்லாம் சரியாய்த்தானே இருக்கிறது..?' ஒரு மொட்டைக் கடிதம் கூட வந்தது.

எல்லாவற்றையும் துடைத்தெறிந்தார்கள். சத்யாவும் வினோதினியும் எப்போதும் போல் உற்சாகமாகக் களை கட்டின கச்சேரிகள். வம்புக்கு அலைந்தவர்கள் கூட வாய் மூடி, மெய் மறந்து ரசித்தார்கள். தங்களை அறியாமல் அந்த சுருதி-லய சங்கமத்தில் ஐக்கியமானார்கள்.

எல்லாம் அந்த பத்திரிகை பேட்டி வெளியாகும்வரைதான். கோடாரியால் ஓங்கிப் பிளந்தது போன்ற ஒரு போடு போட்டது அந்த அட்டைப்படக் கட்டுரை.

வினோதினி, நிமிர்த்திய நெஞ்சும் உயர்த்திய கையுமாகத் தாளம் போட, சத்யா சற்றே முன்னுக்குச் சாய்ந்து மிருதங்கம் வாசித்த

அந்தக் கணத்தை போட்டோவாக உறைய வைத்து அட்டையில் போட்டிருந்தார்கள். அவள் உன்மத்தமாகவும் அவன் பவ்ய மாகவும்... உடன் வாசகம்: 'வீட்டிலும் பக்க வாத்தியமா?' டிசம்பர் இசை விழாவை யொட்டி வெளியான இதழ். சத்யாவும் வினோதினியும் சேர்ந்து கொடுத்த ஒரு சரா சரி பேட்டிக்குத்தான் இப்படியொரு விஷமத் தனமான தலைப்பு. மிகத் திறமையாய் ஆனால் ரசனைக் குறைவுடன் எடுத்துச் சேர்த்த வண்ணப்படம்.

சென்ற இடமெல்லாம் இந்த அட்டை பற்றிய பேச்சும் விமர்சனமும் விரட்டிக் கொண்டு வந்தன.

வினோதினி சோர்ந்து போனாள். சத்யா கசந்து போனான்.

எனினும் முடியும் வரை விஷயத்தைப் பற்றி விவாதிப்பதில்லை என்று முடிவெடுத் தார்கள். பல்லைக் கடித்துக் கொண்டு மூன்று வாரங்களைத் தள்ளினார்கள். சுமைகளைத் தூக்கிக் கொண்டு மேடை ஏறாமல் வழக்கம் போல் அர்ப்பணிப்போடு பாடி, வாசித்து... ஒரு பழுது சொல்ல முடியவில்லை.

மூன்று வார முடிவில் ஒரு நாள் இரவு மதுரை மணி ஐயர் டேப் ஓடிக் கொண்டி ருக்க, கனமான மௌனத்தில் சத்யா. பயம் கலந்த எதிர்பார்ப்புடன் வினோதினி.

சத்யா எழுந்து போய் காஸெட்டை அணைத்தான். "போறும் வினோதினி!"

"எது போறுங்கறே சத்யா?"

"நாம சேர்ந்து கச்சேரி பண்ணினது தான்..."

"நாமதான் யார் என்ன சொன்னாலும், சலனப்படக்கூடாதுன்னு முதல்லயே தீர் மானம் பண்ணிட்டமே சத்யா..." குரல் கர கரத்தது.

"இப்ப நீதானே சலனப்படறே! குரல் கம்மிப் போச்சு..."

"இல்ல சத்யா- இந்த வருத்தம் மத்தவங்க பேசினதுக்காக இல்ல சத்யா- இப்ப நீ சொன்ன பாரு... அதுக்..."

"நான் இன்னும் சொல்லியே முடிக் கலையே..."

"உம்..."

"எவ்வளவு வருஷம் ஆனாலும் உலகம் நம்மளை இதே மாதிரிதான் பார்க்கும் வினோதினி. நம்ம சங்கீதத்தைவிட இந்த நூதனம்தான் அதுக்கு முக்கியமா படும். ஆண், பெண்ணுக்கு அடுத்த ஸ்தானத்தில இருக்கற நூதனம்..."

"ஆனால், சத்யா..."

நிருபர்: எதிர்காலத்துல தமிழ்ப் படவுலகை ஒரு கலக்கு கலக்குவேன்னு எப்படிச் சொல்றீங்க?
நடிகை: இப்பவே நாலைஞ்சு சைஸ்ல கரண்டி வாங்கி வெச்சிருக்கேன்!
—கொங்கணாபுரம் வே.செந்தில்

"தெரியும் வினோதினி.. மேடை ஏறுற எல்லாரும் கலைஞர்கள் - அவங்க ஒருத்தர் ஒருத்தர் சார்ந்திருக்கறபோது முதலிடம் என்ன இரண்டாவது இடம் என்ன?.. இதைப் பத்தி பேசிக்கக்கூட அவசியமில்லாத அளவுக்கு நாம இரண்டு பேருமே உணர்ந்திருக்கோம். ஆனால்.."

"உலகம் உணரல்லேங்கறயா சத்யா?"

"உணரல்லே; உணரவும் போறதில்ல. நீயும் நானும் வெள்ளைக் காக்கா மாதிரி வேடிக்கைப் பொருளா ஆயிட்டோம். நம்ம பாட்டும் வாசிப்பும்... who cares for it?"

இவ்வளவு உக்கிரத்தில் சத்யாவை இதுவரை பார்த்ததில்லை. வினோதினி பேச்சற்றுப் போனாள்.

"நான் வாசிக்கறதைப் படிப்படியா குறைச்சுக்கப் போறேன் வினோதினி. அப்பாவோட ஃபாக்டரியில கவனம் செலுத்தப் போறேன். அப்படி செஞ்சா வம்பு வழக்கு இல்லாம போகும். ஆறு மாசத்துல கச்சேரிகளைப் பாதியா குறைச்சுப்பேன். ஒன்றரை வருஷத்துல முழுக்க நிறுத்திடுவேன்..."

"நம் பிரதமருக்குப் பிடித்த நாடு எது தெரியுமா?"
"எது?"
"சிரியா!"
-புளியரை கணேசன்

வினோதினி அழுகையில் கரைந்து கொண்டிருந்தாள். சத்யா அவளை நெஞ்சில் சாய்த்துக் கொண்டான். அழட்டும் என்று அமைதியாகக் காத்திருந்தான். அவன் ஜிப்பாவும் பனியனும் ஈரமாகி நெஞ்சும் நனைந்து போன பிறகு, வினோதினியின் கேவல்கள் மெள்ள அடங்கின.

தலையை நிமிர்த்தாமலே அவள் கேட்டாள்: "நான் வேணா கச்சேரி பண்றதை நிறுத்திடறேன் சத்யா; நீ மத்தவங்களுக்கு வாசிக்கறதுல பிரச்னை ஒண்ணும் இருக்காதே..."

"என்னைப் பாரு..." சத்யா அவள் முகத்தை நிமிர்த்தி, கண்களுக்குள் பார்த்துச் சொன்னான். "உன்னால அது முடியாது வினோதினி. எனக்கு அது உறுதியாத் தெரியும். மேலும்... நம்ம இரண்டு பேர்ல, you are the better artist."

"சே...! இன்னைக்கு தோசை மழைப்பா!"
"என்னது, தோசை மழையா...?"
"ஆமா... 'அடைமழை'ன்னு எத்தனை நாள்தான் சொல்றது?"
-சீர்காழி வி.ரேவதி

வினோதினி கண்களை மூடிக் கொண்டாள். "ஆனால் சத்யா...நம்ம இரண்டு பேர்ல, you are the better person..." மூடிய அவள் இமைகளின் ஓரத்துத்துளிகளை மென்மையாகத் துடைத்தான் சத்யா.

நாள் முழுதும் ஆட்டம் போட்ட ஒரு குழந்தையின் களைப்புடன் அவள் தூங்கிப் போனாள். அவனுக்குத்தான் இன்னும் உறக்கம் வரவில்லை. பவழமல்லி வாசத்தை நுகர்ந்தபடி நீண்ட நேரம் உட்கார்ந்திருந்தான்.

## "உங்கள் மகிழ்ச்சி எங்கள் வளர்ச்சி"



நாங்கள் அறிமுகப்படுத்தும் புதிய மாருதிகார் மற்றும் 108 கவர்ச்சிகரமான பரிசுகளுடன் கூடிய புதிய திட்டம்.

### "இறால் பண்ணைதிட்டம் இனிமையான எதிர்காலத்திற்கு"

**64% P.A.**

உங்கள் முதலீடு
ரூ.5000/- மட்டும்

**100% EOU**

| முதலீடு | காலம் | வருட வருமானம் | திட்டமுடிவில் போனஸ் | மொத்த தொகை | விகிதம் |
|---|---|---|---|---|---|
| ரூ.5000/- | .6 வருடம் | ரூ. 1,200/- | ரூ. 10,000/- | ரூ. 17,200/- | 40.7% P.A |
| ரூ.5000/- | 10 வருடம் | ரூ. 1,200/- | ரூ. 25,000/- | ரூ. 37,000/- | 64% P.A |

★ பணத்திற்கு உத்திரவாதமாக முன்தேதியிட்ட காசோலை
★ 1500 ச.அடி நிலம் திட்டகாலம் வரை குத்தகைக்கு
★ இத்திட்டத்தில் இணையும் அனைவருக்கும் பரிசுகூப்பன் வழங்கப்படும்

**எங்களுடன் இணைவீர்! வாழ்வில் வளம் பெறுவீர்!!**

## அபிராமி அக்வா அனெக்ஸா (மெட்ராஸ்) லிமிடெட்
## ABBIRAMI AQUA ANNEXA (MADRAS) LIMITED

உங்களுடைய டெபாசிட்டுகளுக்கு கவர்ச்சிகரமான வட்டி வழங்குகிறோம்

**24% P.A**
மாத வட்டி

**27% P.A**
வருட வட்டி

15.3.95 வரை பெறும் டெபாசிட்டுகளுக்கு 3% ஊக்கத்தொகை வழங்கப்படும்

## அபிராமி HIGH இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

**Registered Off :**
Chithra Complex,
Near Chathiram Bus Stand,
Tiruchy- 2.
✆ 31467, 468508

**Corporate Off :**
49, Brindhavan Street,
Murugan Complex,
West Mambalam,
Madras -600 033.
✆ 4840258

**Branch Off :**
55-B, Chinniah Complex,
Five Roads,
Near Gowri Theatre,
Salem - 636 004.

பார்த்திபன் கனவு

## 26. குடிசையில் குதூகலம்

மறுநாள் பொன்னனும் வள்ளியும் பேசிப் பேசிச் சிரிப்பதற்கும் ஆச்சரியப்படுவதற்கும் எத்தனையோ விஷயங்கள் இருந்தன.

படகு கிளம்புகிற சமயத்தில் தீவர்த்திகளுடனும் ஆட்களுடனும் வந்து சேர்ந்த மாரப்ப பூபதிதான் என்ன ஆர்ப்பாட்டம் செய்தான்? என்ன அதிகார தோரணையில் பேசினான்?

"நிறுத்து படகை!" "பிடித்துக் கட்டு இரண்டு பேரையும்!" "விடாதே!" "படகைச் சோதனை போடு!" என்று என்ன தடபுடல் செய்து விட்டான்.

இவ்வளவு தடபுடலுக்கும் பொன்னனும் வள்ளியும் அமைதியாயிருந்தார்கள். படகைச் சோதனை போடும் போது, அவர்கள் கரையிலேயே இறங்கி நின்று விட்டார்கள்.

படகில் ஒன்றுமில்லையென்று கண்டதும் மாரப்பனுடைய முகத்தில் ஏமாற்றமும் கோபமும் கொந்தளித்தன.

"பொன்னா! எங்கே அது!" என்றான்.

"எது எங்கே, சேனாதிபதி?" என்று கேட்டான் பொன்னன்.

"கையிலே என்னவோ கொண்டு வந்தாயே, அதுதான்!"

"என்னவோ கொண்டு வந்திருந்தால், அது என்னமாய் இல்லாமலிருக்கும்?" என்றான் பொன்னன்.

மாரப்பன் மிரட்டி உருட்டிப் பார்த்ததெல்லாம், பலிக்கவில்லை. மாரப்பன் தன்னுடைய ஆட்களை விட்டு மரத்தடியிலும் தண்ணீரிலுங்கூடத் தேடிப் பார்க்கச் சொன்னான். ஒன்றும் இடைக்கவில்லை.

நடுநடுவே வள்ளி, பொன்னன் காதோடு என்னவோ சொல்லிக் கலீரென்று சிரித்தபடியால் மாரப்பனுடைய கோபம் அதிகமாயிற்று.

"இந்த அர்த்த ராத்திரியில் என்னத்துக்காக இங்கிருந்து திருட்டுத்தனமாகக் கிளம்புகிறீர்கள்? படகு ஏது?" என்று கேட்டான்.

"காலையில் தோணித் துறைக்குப் போய்ச் சேர்ந்துவிடலாம் என்று இப்போதே கிளம்புகிறோம். எங்கள் பாட்டன் படகு; அதைத் தோணித் துறைக்குக் கொண்டு போகிறோம்" என்று வள்ளி மறுமொழி சொன்னாள்.

"அரண்மனையில் புகுந்து நீங்கள் எதையோ திருடிக் கொண்டு வந்தீர்கள்; கொண்டு வந்ததை எங்கேயோ ஒளித்து வைத்திருக்கிறீர்கள். உண்மையை ஒத்துக் கொள்ளாவிட்டால், உங்களை இப்படியே கொண்டு போய்க் காராகிரகத்தில் அடைத்து விடுவேன்" என்றான் மாரப்பன்.

"எந்தக் காராகிரகத்தில் அடைப்பீர்கள்?" என்றான் பொன்னன்.

"நீ என்னத்துக்காக அவரோடு பேசறே? நாளைக்குச் சக்கரவர்த்தியின் சமூகத்தில் வழக்கைத் தீர்த்துக் கொண்டால் போகிறது!" என்றாள் வள்ளி.

இதைக் கேட்டதும் மாரப்பனுடைய முகம் தொங்கிப் போய் விட்டது. சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தான். பிறகு தன்னுடன் வந்திருந்த ஆட்களைப் போகச் சொல்லி விட்டுப் பொன்னனைப் பார்த்துச் சாவதானமாய்ச் சொன்னான்.

"இதோ பார், பொன்னா! உனக்கும் எனக்கும் பழக்கம் ஏற்பட்டது இப்போது அப்போதல்ல. சில சமயம் நமக்குள் மனஸ்தாபம் ஏற்பட்டிருக்கிறதென்றால், அதற்கு உன் பெண்டாட்டியின் வாய்த்துடுக்குத்தான் காரணம்..."

"இவருடைய கையிலே துடுப்பு, என்னுடைய வாயிலே துடுக்கு..." என்றாள் வள்ளி.

"நீ சற்றுப் பேசாமலிரு, வள்ளி! ஆண் பிள்ளைகள் பேசிக் கொண்டிருக்கும் போது நீ ஏன் குறுக்கிடுகிறாய்?" என்றான் பொன்னன்.

"ஓகோ? நீங்கள் ஆண் பிள்ளைகளா? இருட்டிலே தெரியவில்லை. வெளிச்சம் போட்டுப் பார்த்தால் ஒருவேளை தெரியும்" என்று வள்ளி முணுமுணுத்தாள்.

மாரப்பன், "பொன்னா! அவ்விதம் வள்ளியை நீ தள்ளி விட வேண்டாம். நான் சொல்லுகிறது அவளுக்கும் தெரிய வேண்டியதுதான். உங்களால் எனக்கும் ஒரு முக்கிய காரியம் ஆக வேண்டியிருக்கிறது. அதை மட்டும் நீங்கள் செய்து கொடுத்தீர்களானால், உங்கள் உதவியை நான் மறக்க மாட்டேன். என்னாலும் உங்களுக்கு ஏதாவது ஒத்தாசை வேண்டியதாயிருக்கும். சிறு துரும்பும் பல்லுக்

குத்த உதவும்...'' என்றான்.

"உங்களைச் சிறு துரும்பு என்று யாராவது சொல்வார்களா, சேனாபதி?" என்றான் பொன்னன்.

"சரிதான்; இந்தத் துரும்பினால் பல்லைக் குத்தினால், பல்லு உடைந்து போய் விடும்" என்று வள்ளி முணுமுணுத்தாள்.

"என்னால் தங்களுக்கு ஆகக்கூடிய ஒத்தாசை என்ன இருக்கிறது? சேனாபதி! இந்த ஏழைப் படகோட்டி...''

மறுபடியும் வள்ளி குறுக்கிட்டு, "நீ ஏழை என்றால் யாராவது நம்புவார்களா? உன்னை உருக்கினால் ஒரு ராஜ்யத்தை வாங்கலாமே..." என்றாள்.

மாரப்பன் கூடச் சிரித்து விட்டான். "ஆமாம் பொன்னா! உன் பெயரே உனக்கு விரோதமாயிருக்கிறது. போகட்டும், நான் சொல்ல வந்தது என்னவென்றால், அந்தக் கபடச் சாமியார் இருக்கிறார் அல்லவா? அவர் இருக்கிற இடத்தை மட்டும் சொல்லி விடு. அவரைப் பிடித்துக் கொடுப்பதாகச் சக்கரவர்த்தி குமாரிக்கு வாக்களித்திருக்கிறேன். உன் பேரிலும் வள்ளி பேரிலும் குந்தவி தேவிக்கு ரொம்பக் கோபம். நீங்கள் எனக்கு ஒத்தாசை செய்தால் குந்தவி தேவியிடம் உங்களைப் பற்றிச் சொல்லிக் கோபம் திரும்படி செய்வேன்..."

''சேனாபதி நாங்கள் படகோட்டிப் பிழைப்பவர்கள்; யார் கோபம் எங்களை என்ன செய்யும்?" என்றான் பொன்னன்.

"சிவனடியார் எங்கே இருக்கிறார் என்று சொல்ல மாட்டாயா?"

"தெரிந்தால்தானே சொல்லுவேன்!"

"அந்த வேஷதாரிச் சாமியார் இன்றைக்குக் கூட இந்த உறையூரிலேதான் இருக்கிறார். 'இல்லை' என்று சத்தியமாய்ச் சொல்வாயா?"

"அதெப்படிச் சொல்கிறது? சாமியார் மந்திர சக்தியுள்ளவராச்சே! எந்த நேரத்தில் எங்கே இருக்கிறாரோ, யாருக்குத் தெரியும்?" என்றாள் வள்ளி.

"இந்தச் சமயம் அவர் எங்கே இருக்கிறார் என்று உனக்குச் சத்தியமாய்த் தெரியாதா?"

"சத்தியமாய்த் தெரியாது" என்று பொன்னனும் வள்ளியும் ஏககாலத்தில் உண்மையைச் சொன்னார்கள். நிஜமாகவே அவர்களுக்குத் தெரியாதுதானே?

"இருக்கட்டும், பொன்னா! நான் மட்டும் மீசை முளைத்த ஆண் பிள்ளையானால் ஒரு நாளைக்கு அந்தச் சடைச் சாமியாரைக் கையும் மெய்யுமாகப் பிடித்து, அவர் சடையைப் பிய்த்தெறிந்து, அவருடைய உண்மைச் சொரூபத்தை வெளிப்படுத்துவேன்! அப்போது உங்களையும் லேசில் விடமாட்டேன்'' என்று கருவிக் கொண்டே மாரப்பன் போய்ச் சேர்ந்தான்.

அவற்றையெல்லாம் ஒவ்வொன்றாய் இப்போது நினைத்துக் கொண்டு சிரித்த வள்ளி, "ஆகா; சாமியாருடைய சடையை மட்டும் நிஜமாகவே பிய்த்துவிட்டுப் பார்த்தால்... மனுஷன் உடனே மூர்ச்சை போட்டு விழுந்துவிட மாட்டானா!" என்றாள்.

"ஆமாம், வள்ளி! அந்தச் சாமியார் யார்? சொல்கிறேன், சொல்கிறேன் என்று பயமுறுத்திக் கொண்டிருக்கிறாயே?" என்று பொன்னன் கேட்டான்.

"பெட்டிக்குள் என்ன இருக்கிறது என்று நீ சொல்லு; பிறகு சாமியார் யார் என்று நான் சொல்லுகிறேன்."

''அதை நினைத்தால்தான் எனக்கு வேதனையாயிருக்கிறது! பெட்டி மட்டும் கிடைக்காமற் போனால்... ஐயோ! மகாராணியின் முகத்தில் நான் எப்படி விழிப்பேன்?"

"அப்படி என்னதான் அந்த அதிசயப் பெட்டிக்குள் இருக்கிறது? சொல்லேன்!"

"அது அதிசயப் பெட்டிதான் வள்ளி! அதற்குள் சோழ வம்சத்தின் பரம்பரைப் பொக்கிஷம் இருக்கிறது. கரிகாலச் சக்கரவர்த்தியின் உடைவாளும், வள்ளுவர் பெருமான் தம் கையால் எழுதிய தமிழ் வேதச் சுவடியும் இருக்கின்றன. பார்த்திப மகாராஜா, போர்க்களத்துக்குக் கிளம்பிய போது, அந்தப் பெட்டியை மகாராணியிடம் ஒப்புவித்தார். இளவரசருக்கு வயது வந்து சுதந்திர மன்னராகும்போது அவரிடம் ஒப்படைக்கும்படி சொல்லிவிட்டுப் போனார்."

"இத்தனை நாளும் அரண்மனையில் இருந்ததை இப்போது என்னத்திற்காக மகாராணி எடுத்து வரச் சொன்னார்? இளவரசருக்கு அனுப்பி வைக்கலாம் என்றா?"

"இளவரசருக்கு எப்படி அனுப்புகிறது? அவர் இருக்குமிடந்தான் யாருக்குத் தெரியும்? பாவம்! எந்தக் கண்ணில்லாத் தீவிலே என்ன கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாரோ?... அதற்காக இல்லை, வள்ளி! பல்லவ சக்கரவர்த்தி உறையூருக்கு வருகிறார் என்ற செய்தி தெரிந்தவுடனே மகாராணி எனக்கு இந்தக் கட்டளையை இட்டார். பல்லவ குலத்தாரின் வழக்கம் தெரியுமோ,

அமரர் கல்கி

இல்லையோ? நல்ல வேலைப்பாடான பொருள் எதைக் கண்டாலும் கொண்டு போய்விடுவார்கள். சிற்பிகள், சித்திரக்காரர்கள் இருந்தால், அழைத்துப் போய் விடுவார்கள். சுவரில் எழுதியிருக்கும் சித்திரங்களை மட்டுந்தான் அவர்களால் கொண்டு போக முடியாது. அதற்காகத்தான் நமது பார்த்திப மகாராஜா உறையூரில் சித்திரக் காட்சி மண்டபம் மட்டும் ஏற்படுத்தியிருந்தார்!—"

"ஐயையோ! அப்படியா சமாசாரம்? எனக்குத் தெரியாமல் போச்சே!"

"அதனால்தான் நான் சிவனடியாரிடம் பெட்டியைக் கொடுக்கத் தயங்கினேன். நீ 'கொடு கொடு' என்று அவசரப்படுத்தினாய்!"

"நான் என்ன செய்வேன்? அந்த அவசரத்தில், வேறு என்னதான் பண்ணியிருக்க முடியும்? இருந்தாலும், என் மனத்திற்குள் ஏதோ சொல்கிறது. பெட்டி பத்திரமாய் வந்துவிடும் என்று."

"வந்தால் நல்லதுதான், இல்லாவிட்டால் மகாராணியின் முகத்திலேயே நாம் விழிக்க முடியாது! ஆமாம்; அந்தச் சிவனடியார் யார் வள்ளி? அவரைப் பற்றி உனக்கு என்ன சந்தேகம்?"

அப்போது வள்ளி பொன்னன் காதோடு ஏதோ சொன்னாள். அதைக் கேட்டதும், அவனுக்கு உண்டான ஆச்சரியம் முகத்தில் தெரிந்தது. அதே சமயத்தில் வெளியில் குதிரைகளின் குளம்புச் சப்தம், பல்லக்குச் சுமப்பவர்களின் குரலொலி முதலியவை கேட்கவே, பொன்னன், வள்ளி இரண்டு பேருமே வியப்படைந்து குடிசை வாசலுக்கு வந்து பார்த்தார்கள்.

## 27. கண்ணீர்ப் பெருக்கு

வள்ளியும் பொன்னனும் குடிசைக்கு வெளியில் வந்தபோது, பார்த்திப மகாராஜாவின் காலத்திற்குப் பிறகு அவர்கள் பார்த்திராத அதிசயமான காட்சியைக் கண்டார்கள். உறையூர்ப் பக்கத்திலிருந்து காவேரிக்கரைச் சாலை வழியாக அரச பரிவாரங்கள் வந்து கொண்டிருந்தன. குதிரை வீரர்களும், காலாட்படைகளும், கொடி, பரிவட்டம் முதலிய இராஜ சின்னங்கள் ஏந்திய வீரர்களும் சங்கம், துந்துபி முதலிய பலவகை வாத்தியங்கள் முழக்குகிறவர்களும் வெண் சாமரம் ஏந்திய சேடிமார்களும் வரிசை வரிசையாக வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் அரசர்கள் ஏறுவதற்குரிய — அலங்கரித்த உயர் ஜாதிப் புரவிகளும், இராஜ ஸ்திரீகளுக்குரிய முத்து விதானம் கட்டிய தந்தப் பல்லக்குகளும் வந்து கொண்டிருந்தன.

இந்த இராஜ பரிவாரமெல்லாம் தோணித் துறைத் தோப்பில் வந்து இறங்கத் தொடங்கியபோது, ஓடக்காரப் பொன்னனும் அவன் மனைவியும் ஆச்சரியக் கடலில் மூழ்கினார்கள்.

இதோடு ஆச்சரியம் முடிந்தபாடில்லை. காவேரி நதியில் அதே சமயத்தில் ஒரு விந்தைக் காட்சி காணப்பட்டது.

உறையூர்ப் பக்கத்திலிருந்து அலங்கரித்த பல படகுகள் அன்னப் பட்சிகளைப் போல் மிதந்து கிழக்கு நோக்கி வந்துகொண்டிருந்தன.

அவற்றின் நடுவில் சிங்கக் கொடி பறந்த அழகிய படகைப் பார்த்ததும் சக்கரவர்த்தியும் அவருடைய பரிவாரங்களுந்தான் வருகிறார்கள் என்பது பொன்னனுக்குத் தெரிந்து போயிற்று.

ஒருவேளை அந்தப் படகுகள் எல்லாம் இந்தத் தோணித் துறைக்குத்தான் வருமோ என்று பொன்னன் எண்ணமிட்டுக் கொண்டிருக்கையிலேயே, படகுகளின் திசைப் போக்கு மாறியது! காவேரியைக் குறுக்கே கடந்து, வசந்தத் தீவை நோக்கி அவை செல்லத் தொடங்கின. "ஓகோ! சக்கரவர்த்தி வசந்தத் தீவுக்கு ஏன் போகிறார்? ஒருவேளை மகாராணியைப் பார்க்கப் போகிறாரோ?" என்று பொன்னன் நினைத்தான். உடனே, தோப்பில் வந்து இறங்கிய வீரர்களிடம் நெருங்கிப் போய் விசாரித்தான். அவன் எண்ணியது உண்மையென்று தெரிந்தது. சக்கரவர்த்தியுடன், குந்தவி தேவி, சிறுத்தொண்டர், அவருடைய பத்தினி முதலியோர் அருள்மொழி ராணியைப் பார்க்க, வசந்தத் தீவுக்



குப் போகிறார்களென்று அறிந்தான். மேலும் விசாரித்து, அவர்கள் அங்கிருந்து திரும்பி இந்தத் தோணித் துறைக்கு வருவார்களென்றும் இங்கிருந்து சிறுத்தொண்டர் ஈழச் சோழ நாட்டுக்கு யாத்திரை போகிறார் என்றும் சக்கரவர்த்தியும் குந்தவி தேவியும் உறையூருக்குத் திரும்புகிறார்கள் என்றும் தெரிந்து கொண்டான்.

அந்தச் சமயம் வசந்தத் தீவில் தானும் இருக்க வேண்டும் என்றும் என்ன நடக்கிறதென்று தெரிந்து கொள்ள வேண்டும் என்றும் பொன்னனுக்கு உள்ளம் துடித்தது. ஆனால் அந்த ஆவலை வள்ளியிடம் தெரிவித்த போது அவள் "நன்றாய் இருக்கிறது! சக்கரவர்த்தி அங்கே போயிருக்கும்போது, அவ






"என்ன... இந்தப் படத்துக்கு 26 அமைச்சர்களும் ஒண்ணா வந்திருக்காங்க...?"

" 'இந்தப் படத்திற்கு 'ஜே..ஜே' என்று கூட்டம் அலைமோதுகிறது'ன்னு விளம்பரம் வந்துச்சாம். எதுக்கு வீண் வம்புன்னு அமைச்சர்கள் எல்லாரும் படம் பார்க்க வந்துட்டாங்க...!"

- அ. சுகுமார்

---

ருடைய கட்டளையில்லாமல் நீ ஏன் அங்கே போக வேண்டும்? என்ன நடக்கிறதென்று தானே தெரிகிறது. அவசரம் என்ன?" என்றான்.

எனவே, பொன்னன் துடிதுடித்துக் கொண்டு இக்கரையிலேயே இருந்தான். ஒரு முகூர்த்த காலம் ஆயிற்று. வசந்தத் தீவின் தோணித் துறையில் கலகலப்பு ஏற்பட்டது. பலர் அங்கே கும்பலாக வந்தார்கள். படகுகளிலும் ஏறினார்கள். படகுகள் இக்கரையை நோக்கி வரத் தொடங்கின.

வருகிற படகுகளை மிகவும் ஆவலுடன் வள்ளியும் பொன்னனும் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அருகில் நெருங்க நெருங்கப் படகுகளில் இருந்தவர்கள் கண்ணுக்குத் தெரிய ஆரம்பித்தார்கள். சிங்கக் கொடி கம்பீரமாகப் பறந்த படகிலே சக்கரவர்த்தியும் ஒரு மொட்டைச் சாமியாரும் இருந்தார்கள்.

இதற்குள் அவர்களுடைய பார்வை இன்னொரு படகின் மேல் சென்றது. அதில் மூன்று பெண்மணிகள் இருந்தார்கள். ஒருவர் தான் குந்தவிதேவி; இன்னொருவர் சிவவிரதம் பூண்ட மூதாட்டி. ஆனால், மூன்றாவது யார்? இதென்ன விந்தை? — அருள்மொழித் தேவி போல் அல்லவா இருக்கிறது?

ஆமாம். அருள்மொழித்தேவிதான். படகு கரையை அடைந்து, எல்லோரும் இறங்கிய போது, பொன்னனும் வள்ளியும் வேறு யாரையும் பார்க்கவுமில்லை; கவனிக்கவுமில்லை. அருள்மொழித்தேவியின் காலில் விழுந்து எழுந்து, அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு திகைத்து நின்றார்கள்.

அருள்மொழித்தேவி அவர்களை நோக்கித் தழுதழுத்த குரலில் கூறினாள் :-

"பொன்னா! வள்ளி! என்னால் இங்கே தனியாகக் காலங்கழிக்க முடியவில்லை. நான் திவ்ய ஸ்தல யாத்திரை போகிறேன். நீங்கள் என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். இந்தத் தோணித் துறையிலேயே இருந்து கொண்டிருங்கள். ஒருவேளை எப்போதாவது மறுபடியும் திரும்பி வந்தால்..."

இச்சமயம் பொன்னன் — வள்ளி இவர்கள் கண்களில் கண்ணீர் பெருகுவதை அருள்மொழித்தேவி கண்டதும் அவளுக்கும் கண்களில் நீர் துளித்தது. பேச முடியாமல் தொண்டையை அடைத்தது. பக்கத்திலிருந்த சிவவிரதையின் கரத்தைப் பிடித்துக் கொண்டு மேலே நடக்கத் தொடங்கினாள்.

அன்றைய தினம் அந்தக் காவேரிக் கரைத் தோணித் துறையிலே கண்ணீர்ப் பிரவாகம் ஏராளமாய்ப் பெருகித் தண்ணீர்ப் பிரவாகத்துடன் போட்டியிட்டது.

சக்கரவர்த்தியும் சிறுத்தொண்டரும் பிரிந்தபோது, அவர்களுடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று.

சிறுத்தொண்டரின் பத்தினியிடமும், அருள்மொழித் தேவியிடமும் குந்தவி விடை பெற்றுக் கொண்ட சமயம், அவர்கள் எல்லாருடைய கண்களிலிருந்தும் கண்ணீர் ஆறாய்ப் பெருகிற்று.

கிழக்குத் திசை போகிறவர்கள் முதலில் கிளம்பினார்கள். சிறுத்தொண்டர் தனியாக ஒரு பல்லக்கில் ஏறி அமர்ந்தார். அவர் பத்தினியும் அருள்மொழித்தேவியும் இன்னொரு பல்லக்கில் அமர்ந்தார்கள். சேடிகளும் பரிவாரங்களும் தொடர்ந்து வர, குதிரை வீரர்கள் முன்னும் பின்னும் காவல் புரிந்து வர, சிவிகைகள் புறப்பட்டன.

சிவிகைகள் சற்றுத் தூரம் போன பிறகு, பொன்னனுக்குத் திடீரென்று ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. அவன் ஓட்டமாய் ஓடி அருள்மொழி இருந்த பல்லக்கை நெருங்கினான். தேவியும் சிவிகையை நிறுத்தச் சொல்லி, "பொன்னா! என்ன? இவ்வளவு படபடப்பு ஏன்?" என்றாள்.

"தேவி!..." என்று பொன்னன் மேலே பேச நாவெழாமல் திகைத்தான்.

"ஏதோ சொல்ல விரும்புகிறாய் போலிருக்கிறது. பயப்படாமல் சொல்லு. இந்த அம்மையார் இருப்பதினால் பாதகமில்லை" என்றாள் ராணி.

"தேவி! பெட்டியைப் பற்றிச் சொன்னீர்களல்லவா?"

"என்ன? கிடைத்து விட்டதா?" என்று ராணி ஆவலுடன் கேட்டாள்.

"ஆமாம்; இல்லை. சீக்கிரம் கிடைத்து விடும். அதை..." என்று தடுமாறினான் பொன்னன்.

அருள்மொழி சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு, "பொன்னா! பெட்டியை நீதான் பத்திரப்படுத்தி வைக்க வேண்டும். முன்னமே, உன்னிடம் ஒப்புவிப்பதாகத் தான் இருந்தேன். ஒருவேளை, ஒருவேளை... நான் இல்லாத சமயத்தில்... அவன் வந்தால்..." ராணி மேலே பேச முடியாமல், விம்மத் தொடங்கினாள்.

பொன்னன், "ஆகட்டும், அம்மா! இளவரசரிடம் பத்திரமாய் ஒப்புவித்து விடுகிறேன்" என்று அழுது கொண்டே சொன்

னான்.

சிவிகை மேலே சென்றது.

பொன்னன் திரும்பி வந்தபோது, சாலையில் பல்லக்கின் அருகில் நின்று குந்தவி தேவி கண்ணீர் விடுவதையும், சக்கரவர்த்தி அவளைத் தேற்றுவதையும் கண்டான்.

"எனக்குத் தாயார் கிடைத்ததாக எண்ணி மனமகிழ்ந்தேன், அப்பா! அதற்குக் கொடுத்து வைக்கவில்லை!" என்று குந்தவி சொன்னது பொன்னன் காதில் விழுந்தது.

குந்தவி சிவிகையில் ஏறினாள். சக்கரவர்த்தி குதிரை மீது ஆரோகணித்தார். உறையூரை நோக்கி அவர்கள் கிளம்பினார்கள்.

பொன்னன் குடிசைக்குள் நுழைந்ததும் வள்ளி பெருக்கிக் கொண்டிருப்பதைக் கண்டான்.

"ஐயோ! எனக்கு முன்னமே தெரியாமல் போச்சே! தெரிந்திருந்தால் மகாராணியுடன் நானும் வருவதாகச் சொல்லியிருப்பேனே! எனக்கு மட்டும் இங்கே என்ன வேலை!" என்று வள்ளி புலம்பினாள்.

பொன்னன் சிறிது தைரியப்படுத்திக் கொண்டு, "கடைசியில் பெண் பிள்ளை என்பதைக் காட்டி விட்டாயல்லவா? பிரமாத வீரமெல்லாம் பேசினாயே!" என்றான்.

அச்சமயத்தில் மறுபடியும் வெளியில் குதிரையின் காலடிச் சப்தம் கேட்கவே, இருவரும் ஓடி வந்து பார்த்தார்கள். சக்கரவர்த்தி மட்டும் குதிரை மேல் தனியாகத் திரும்பி வந்தார்.

"பொன்னா! நீ இந்தத் தோணித் துறையில்தானே இருக்கப் போகிறாய்? எங்கேயும் போய் விட மாட்டாயே?" என்று கேட்டார்.

"இங்கேதான் இருப்பேன், பிரபோ! எங்கும் போகமாட்டேன்" என்றான் பொன்னன்.

"அதோ பார்! அரண்மனைப் படகை இங்கேயே விட்டு வைக்கச் சொல்லியிருக்கிறேன். குந்தவி தேவி ஒருவேளை வசந்த மாளிகையில் வந்து இருக்க ஆசைப்படலாம். அப்போது நீதான் படகு ஓட்ட வேண்டும்."

"காத்திருக்கிறேன், பிரபோ!"

"இன்னொரு சமாசாரம்; சிவனடியார் ஒருவர் — என் சிநேகிதர் — உன்னிடம் ஒப்புவிக்கும்படி ஒரு பெட்டியைக் கொடுத்தார். அது அந்தப் படகின் அடியில் இருக்கிறது. பார்த்து எடுத்துக் கொள்."

இவ்விதம் சொல்லி விட்டு, சக்கரவர்த்தி வள்ளியை நோக்கினார். அதுவரையில் அவரையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த வள்ளி சட்டென்று தலையைக் குனிந்தாள். அவளுடைய முகத்தில் வெட்கத்துடன் கூடிய புன்னகை உண்டாயிற்று.

அடுத்த கணத்தில், சக்கரவர்த்தியின் குதிரை காற்றாய்ப் பறந்து சென்றது.

(தொடரும்)

## அருள்வாக்கு

நாதசர்மா என்று அந்த பிராம்மணனுக்குப் பேர். அவருடைய பத்தினி அநவத்யை. விதிவத்தாக துலா மாஸம் தினந்தோறும் இவர்கள் மாயவரத்தில் காவேரி ஸ்நானம் செய்தே மோக்ஷம் அடைந்தார்கள் என்று சொல்லியிருக்கிறது.

இவர்கள் பல இடங்களுக்கு க்ஷேத்ராடனம் பண்ணினதாகச் சொல்லுமிடத்தில் கேதாரத்துக்குப் (கேதார்நாத்) போனார்கள்; காசிக்குப் போனார்கள் என்று சொல்லியிருக்கிறது.



இது இங்கே மாயவரத்தில் மட்டுமே தெரிந்த கதை. காசி இங்கேயிருந்து ஆயிரம் மைலுக்கு அப்பால் இருக்கிறது.

காசியில் கங்கையில் இருக்கிற பல கட்டங்களில் ('காட்' என்று சொல்வார்கள்,) 'கேதார்காட்' என்று ஒன்று இருக்கிறது. அந்தக் கேதார்காட்டில் அதைக் குறித்த ஸ்தல புராணம் சொல்லப்படுகிறது. அதிலே நாதசர்மா, அநவத்யை என்ற பிராம்மண தம்பதி ஸ்நானம் செய்த இடம் இது என்று வருகிறது!

நாதசர்மா கதை நம்மூர்காரர்களுக்கே அதிகமாகத் தெரியாது. ராமர், கிருஷ்ணர், ஹரிச்சந்திரன், நளன் முதலியவர்களைப் போல தேசம் முழுவதும் தெரிந்தவரில்லை அவர். அப்படிப்பட்ட ஒருவரைப் பற்றி இங்கே மாயவரத்தில் சொல்கிற புராணக் கதையும், ஆயிரம் மைல் தாண்டி காசியில் சொல்வதும் "டாலி" ஆகிறது என்பதைப் பார்க்கும் போது ஆச்சரியமாயிருக்கிறது!

ஸ்தல புராணங்களை நம்புவதற்கில்லை என்று சொல்வது எவ்வளவு தப்பு என்பதற்கு திருஷ்டாந்தமாகத்தான் இதைச் சொன்னேன்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.



# குருவிக்கூடு

**ஹ**வுசிங்யூனிட் போக வேண்டியிருந்தது பரசுவுக்கு.

நண்பன் சிவராமன் அங்கு இருக்கிறான்.

வண்டியில் கிளம்பினான்.

முகவரி இருந்ததால் சிரமமில்லாது போனது.

சிவராமன் வீட்டில் இருந்தான்.

"யேய் பரசு வா! வா!" என்றான் சிவராமன். உள்ளிருந்து அவன் மனைவி வந்து, "வாங்க!" என்றாள்.

பேசிக் கொண்டிருந்தார்கள். காப்பியும் மிக்சரும் வந்தன.

"பரசு, இருந்து சாப்பிட்டுப் போகணும்!"

"அதுக்கென்ன..."

"இந்த ஊருக்கே வந்துட்டே. பரவாயில்லை. அடிக்கடி வா!"

"கண்டிப்பா! குழந்தைகள் எங்கே சிவராமன்?"

"அவங்க பாட்டியோட வெளியே போயிருக்காங்க. ஆமா, எங்கே வீடு பிடிச்சிருக்கே? ஹவுசிங் போர்டு அப்ளை பண்ண வேண்டியதுதானே?"

சிவராமன் சொன்னதும் பரசு சிரித்தான்.

"ஹவுசிங் போர்டுக்கா? இந்தக் குருவிக் கூட்டுக்கா? நான் வீடு வாங்கிட்டேன்!"

"ஓ. சந்தோஷம்! எங்கே வாங்கியிருக்கே?"

"அப்பாதான் பேசி முடிச்சுக் கொடுத்தார். மேலவீதியிலே இருக்கு. பிரமாதமான வீடு. அற்புதமான அமைப்பு; அவசியம் வரணும். நீயும் உன் வீட்டிலேயும் சிவராமா!"

"ஓ! ஷ்யூர். கண்டிப்பா வரேன். வீடு பெரிசுங்கறே, உங்க ரெண்டு பேருக்கு எதேஷ்டம் இல்லே?"

"ஆமாம். இருக்கட்டும் பரசு! அது மாதிரி வீட்டுலே குடியிருந்தால்தான் எங்களுக்குத் தோதுப்படுது. முன்ன இருந்த வாடகை வீடு கூட தனி வீடுதான்! நமக்கெல்லாம் உன்ன மாதிரி குருவிக் கூட்டு வாசம் ஆகாதுப்பா!"

"முகவரி கொடு பரசு."

எழுதிக் கொடுத்தான் சிவராமன். அதை வாங்கி மனைவியிடம் கொடுத்தான்.

"நாம அவசியம் ஒருமுறை பரசு வீட்டுக்குப் போய் வரணும் கௌரி. சாப்பாடு ரெடி ஆயிடுச்சா?"

"ஆயிடுச்சு, இலை போடறேன். எழுந்து கை கழுவிட்டு வாங்க."

**சா**ப்பிட்டு முடித்ததும் பரசு கிளம்பினான்.

"அவசியம் ரெண்டு பேரும் குழந்தைகளும் வீட்டுக்கு வரணும்!"

"நிச்சயமா பரசு!"

"முகவரி பத்திரம். அப்படியே மிஸ் பண்ணிட்டாலும் வீட்டுப் பேரு 'பாரிஜாதம்'. இதைச் சொன்னா யாரும் கொண்டு வந்து விட்டுடுவாங்க."

"கவலைப்படாதே பரசு! நான் மறந்தாலும் கௌரி மறக்க மாட்டா, உங்க வீட்டை! அவ பிறந்த வீடாச்சே?"

"என்னது?" அதிர்ந்து போய்த் திரும்பினான் பரசு.

"ஆமாம் பரசு. நீ வாங்கியிருக்கிற வீடு கௌரி பிறந்த வீடு. நான்கு பெண்கள், சிரமம் - வித்துட்டாங்க. என்னோட இந்தக் குருவிக் கூட்டுலே அல்லல்பட்டு இப்போ பழகிட்டா! காட்டுலே எத்தனை சுதந்திரமா இருக்கு யானை? அதைப் புடிச்சிட்டு வந்து பழக்கினால் பழகிடுதே! தெருத் தெருவா, வீடு வீடா நாலணா காசுக்கும் தேங்காய் மூடிக்கும் பச்சரிசிக்கும் சலாம் வைக்குதே! எங்கேயும் பழகிக்கணும் பரசு!"

பரசு பேசாமல் வண்டியைக் கிளப்பினான்.

**ஹரணி**



# பார்க் டவுன்
## பெனிபிட் பண்ட் லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம், துவக்கம் 1993 Post Box No. 28 [illegible]
223, [illegible], கந்த கோட்டம் அருகில் பார்க் டவுன், சென்னை - 3. போன்: 532876, 546334

**கிளை அலுவலகங்கள்:** [illegible], சென்னை - 41 போன் : 413582
[illegible] 11-வது [illegible], அண்ணாநகர், சென்னை - 40 போன் : [illegible]



## பிக்சட் டிபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு * |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

**21%** 5 வருடங்கள் ரூ.50,000/- அதற்கு மேலும்

## PB பாண்டு

| முதலீடு | காலம் | திரும்பப் பெறும்தொகை |
|---|---|---|
| ரூ.25,000 | 60 மாதம் | ரூ.70,000 |

## குழந்தைகள் கல்வி நலத்திட்டம்

L.K.G. முதல் கல்லூரி தொடக்கம் வரை

வைப்புத் தொகை ரூ. 5,100/-

3-ஆம் ஆண்டு நிறைவிலிருந்து தொடர்ந்து 12 ஆண்டுகள் ரூ.500/- பெறலாம். திட்ட டெபாசிட் காலத்திலிருந்து 16, 17-வது ஆண்டுகளில் தலா ரூ.1,000/- வீதமும், 18-ம் ஆண்டு துவக்கத்தில் ரூ.75,000/-ம் வழங்கப்படும்.

நலத்திட்டத்தின் 5% மாணவர்களுக்கு +2 அரசுத் தேர்வு மதிப்பெண் அடிப்படையில் ரூ.25,000/- பரிசாக ஒவ்வொருவருக்கும் நிதி நிறுவனம் வழங்கும்.

திட்டத்தின் பயனை உங்கள் மழலைச் செல்வங்களுக்கு வழங்கி
மன நிம்மதி பெறுவீர்! மகிழ்ச்சி அடைவீர்!!

## கனகதாரா டிபாசிட்

ரூ.50,000/-
முதலீடு செய்வீர்
10ஆம் ஆண்டு முடிவில்
ரூ.50,000/- பெறுவீர்
அடுத்த 20ஆம் ஆண்டு
முடிவில்
ரூ.1 கோடி பெறுவீர்

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15 ஆண்டுகள் | 5-ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs.6,320 | Rs.6,000 | Rs.6,000 | Rs.56,320 |

## செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs.7,500 | 15 Yrs | Rs.1,25,000 |
| Rs.9,000 | 15 Yrs | Rs.1,50,000 |

## பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ.100/- | 25 Yrs | Rs.3,00,000 |

## வெகுமதி முதலீட்டுத் திட்டம் - II

ரூ.3450/- செலுத்துவீர்.
252 மாதங்கள் நிறைவில்
ரூ.2 லட்சம் பெறுவீர்.

## மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs.1,000 | Rs.1,184 | Rs.1,430 | Rs.2,000 | Rs.2,535 |

**பென்ஷனர் நலத்திட்டம் 20% P.a.**
ரூபாய் 10 ஆயிரமும் அதற்கு மேலும்: காலம் 1 ஆண்டு
வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**சேமிப்பு திட்டம்**
**10% P.a.**

**தங்க நகை கடன்**
Rs. 3,000 PER 10 GRAM
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்.
(உச்ச வரம்பில்லை)

ஆலோசகர்:
**P. பாலசுப்ரமணியம், B.Sc.**
முதன்மை அறங்காவலர்
கந்தகோட்டம், சென்னை - 3.

[illegible]
டெபாசிட் [illegible]
* தனியோகம் டெபாசிட் திட்டம் 20%
[illegible] ரூ.20,000 டெபாசிட் காலம் 5 ஆண்டுகள்

இயக்குனர் குழுத் தலைவர்:
**R. விவேகானந்தன், B.Com.**

ரூ. 5/- செலுத்தி பங்குதாரர் ஆவீர். ❑ சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டும் ❑ வெள்ளி விடுமுறை



# ஊழ்வினையை வென்ற ஜெயஸ்ரீ!

பெங்களூர்.

1982- புதுவருட தினம். ஜெயஸ்ரீ என்கிற அந்த பி.யூ.ஸி. மாணவி, தேர்வு எழுதப் புறப்படுகிறார்.

''இன்னிக்காவது பரீட்சை ஒழுங்கா நடக்கட்டும்'' என்றபடி வழியனுப்புகிறார் தந்தை ராஜ கோபால். காரணம், ஏற்கெனவே அந்தக் கடைசி பரீட்சை, மாணவர் கலாட்டா காரணமாக ஒரு தரம் ஒத்தி வைக்கப்பட்டிருந்தது.

'இந்த முறையாவது ஒழுங்காக நடைபெற வேண்டுமே' என்கிற பதைப்பில் கல்லூரி செல்லும் ஜெய ஸ்ரீக்கு மறுபடி அதிர்ச்சி. மறுபடி மாணவர் கலாட்டா; மறுபடி ஒத்தி வைப்பு. வருத்தத்துடன் வீடு திரும்பு கையில் அடுத்த கட்ட சோதனை. அவர் பயணம் செய்த பஸ், மரத்தில் மோதி, பயங்கர விபத்து!

டிரைவர் சீட் அருகே நின்றிருந்த ஜெயஸ்ரீ, இடிபாட்டில் சிக்கவிருந்த ஒரு குழந்தையைக் காப்பாற்றப் போக, பாலன்ஸ் தவறி (இஞ்சின் சூடு தணிவதற்காகத் திறந்து வைக் கப்பட்டிருந்த) 'பானட்'டுக்குள் விழு கிறார். சூடு, அவர் வலது கையைப் பதம் பார்க்க, அவரைப் போலவே 'பாலன்ஸ்' தவறிய பலர் ஜெயஸ்ரீ யின் மேலே விழுந்து, அவர் எழ முடியாமல் போக-

ஜெயஸ்ரீ மருத்துவமனையில் அனு மதிக்கப்பட்டார். வலது கை, எலும்பு முறிவு என்று மாவுக் கட்டுப் போட்டு அனுப்பி விட்டார்கள்.

ஆனால் அது எலும்பு முறிவு மட்டும் அல்ல! சூடு, அதிக அழுத்தம் காரணமாக தசைகளில் இறுக்கம் ஏற்பட்டு, ரத்தக் குழாய் வெகுவாக பாதிக்கப்பட்டு விட்டது!

மிகுந்த முயற்சிக்குப் பின்னும் பலனில் லாமல், ஜெயஸ்ரீயின் வலது கரம் செயலற்றுப் போய், எடுக்க வேண்டியதாகி விட்டது!

ரொம்ப சாதாரணக் குடும்பம். கூடப் பிறந்த ஐந்து சகோதரிகளில் நான்கு பேர் திருமணமாகிப் போய்விட்டதால் உதவ முடியாத நிலை. ஒரு சகோதரி மனவளர்ச்சி குன்றியவர். அவரைப் பராமரிப்பதே பெரிய சுமை. கூட, ஜெயஸ்ரீக்கு ஏற்பட்ட இவ்விபத் தும் அதனால் நேர்ந்த பல்லாயிரக் கணக் கான ரூபாய்ச் செலவும் குடும்பத்தை நிலை குலைய வைத்தன.

சிகிச்சைக்கென அடிக்கடி சென்னை வர நேரவே, குடும்பம் நிரந்தரமாக சென்னைக்கு மாறியது.

விதியின் விளையாட்டு அத்துடன் நிற்கவில்லை. வழக்கறிஞரான ஜெயஸ்ரீயின் தந்தை ஒரு விபத்தில் சிக்கி, தலையில் பல மான அடி. இனி எழுந்து நடமாட முடியாத நிலை. அப்புறம் வழக்கு எங்கே? வருமானம் எங்கே?

இந்த அடுக்கடுக்கான சோகச் சம்பவங் கள் போதாமல், மீண்டும் ஜெயஸ்ரீக்கு ஒரு சோதனை. முதுகுத் தண்டில் ஏதோ கோளாறு. ஸ்கேனிங். மறுபடி எக்கச் சக்க செலவு. தவிர, 'ஸ்கேன்' செய்வதற்காக நோயாளிக்குக் கொடுக்கப்படும் ஒரு வித கறுப்பு திரவத்தை ஸ்கேனிங் முடிந்ததும் நிறைய தண்ணீர் குடித்து வெளியேற்ற வேண்டும். இதை ஜெய ஸ்ரீக்கு சொல்லிக் கொடுத்து எச்சரிக்க

மறந்து போனார்கள் டாக்டர்கள். விளைவு! சட்டென்று கண்பார்வை போய்விட்டது ஜெயஸ்ரீக்கு.

இரண்டு நாட்கள் பெரும் போராட்டத்திற்குப் பிறகு ஒரு வழியாகப் பார்வை திரும்ப- கண்ணாடி அணிய வேண்டிய கட்டாயம். அப்போதும் நிற்காமல் கண்ணில் வடியும் நீர். ஆயுள் முழுக்க மருந்து போட்டுக் கொள்ள வேண்டிய நிலை.

மனம் தளரவில்லை ஜெயஸ்ரீ. விதியோடு ஒரு போராட்டம் நடத்திப் பார்க்க முடிவு செய்து கொண்டார். வலது கையை இழந்தாலும், இடது கரத்தால் எழுதிப் பார்த்துப் பழகிக் கொண்டார். கூடவே கார்ட்டூன் வரையவும்!

கார்ட்டூன்கள் வரைவது தொடர்பான சில சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதற்காக பிரில்லியன்ட் டுடோரியல்ஸ் அதிபரும் பிரபல கார்டூனிஸ்ட்டுமான தாணுவை அணுகினார்.

ஜெயஸ்ரீயின் நிலை கண்டு பாதிக்கப்பட்டு, "கார்ட்டூன் வரைவதை ஹாபியாக வைத்துக் கொள். என் நிறுவனத்திலே உனக்கு வேலை தருகிறேன்" என்ற தாணு, ஜெயஸ்ரீயின் இருண்ட வாழ்க்கைப் பாதைக்கு நியான் விளக்குப் போட, பிரில்லியன்ட் நிறுவனத்தில் கிளார்க்காகச் சேர்ந்தார் ஜெயஸ்ரீ!

தமது தளராத உறுதியாலும் விடா முயற்சி, உழைப்பினாலும் இழித்துப் பேசியவர்களே வியக்கும் வண்ணம் திறமை காட்டினார்!

ஜெயஸ்ரீ, தன் நிலைமையை விளக்கி, உதவி கோரி பிரதமருக்கு மனு அனுப்பிய போது, டெல்லிக்கு வந்தால் சிகிச்சைக்கு ஏற்பாடு செய்வதாகப் பதில் வந்தது.

குடும்பப் பொறுப்புகளால் உடனே டெல்லி போக முடியாத சூழலில், கொஞ்சம் கழித்துப் போக, "உடனே வராததால் உதவி சாத்தியமில்லை" என்று சொல்லி விட்டார்கள்.

வேறு வழியின்றி, மாநில அரசுக்கு இவர் உதவி கோரி விண்ணப்பிக்க, "விபத்தால் ஏற்பட்ட ஊனத்துக்கு உதவ சட்டத்தில் இடமில்லை" என்று முதலமைச்சர் செய்ய மறுத்துவிட்டார்!

மேற்கு மாம்பலத்தில் ஒருவர் கருணையுடன் 150ரூபாய் வாடகையில் வீடு தர, தமது கார்ட்டூன்களைக் கொண்டு, வாழ்த்து அட்டைகள் தயாரித்தும் பிரில்லியன்ட் பணி மூலம் கிடைக்கும் வருவாயைக் கொண்டும் நடமாடமுடியாத அப்பா, வயதாகிவிட்ட அம்மா, மனவளர்ச்சியற்ற சகோதரி உள்ளிட்ட குடும்பத்தைக் காப்பாற்றி வருகிறார் ஜெயஸ்ரீ.



"வயதான உங்கள் பெற்றோரை ஏதாவது முதியோர் இல்லத்திலும் சகோதரியை மனவளர்ச்சி குன்றியோருக்கான இல்லத்திலும் சேர்க்கலாமே!" என்று யாராவது கேட்டால், "எனக்கு என்ன கஷ்டம் வந்தாலும் சரி; நான் இருக்கும் வரை எப்படியும் உழைத்து, என் குடும்பத்தை நானே காப்பாற்றுவேன். கஷ்டங்கள் எந்த உருவில் வந்தாலும் தாங்கும் துணிவு எனக்கு இருக்கிறது!" என்று தன்னம்பிக்கையுடன் சொல்கிறார் ஜெயஸ்ரீ.

**-வி.சுபாஷ்சந்திரன், எஸ்.சந்திரமௌலி.**

படங்கள்: **யோகா**

# 50

குரலை உடனே மாற்றிக் கொண்ட ஜெய்சங்கர் சுக்லா, "வீ ஆர் வெரி, வெரி, சாரி, சர். 144 சட்டம் போட்டிருப்பது பற்றி எங்களுக்கு எதுவும் தெரியாது..." என்று கூறி நண்பர்களுக்குக் கண் ஜாடை காட்டினான். நால்வரும் இரண்டிரண்டு பேராய் இரண்டு தனித்தனிப் பாதைகளில் பிரிந்து நடக்கலானார்கள்.

சிறிது தொலைவு நடந்த பிறகு, கோணலாய்த் திரும்பிய தெரு முனையில் நின்று, சாடையாக ரத்னாகர் கவனித்தபோது, மாணிக் லால் இங்ரா தலை குனிந்து சிகரெட்டைப் பற்றவைத்தபடி அதே இடத்தில் நின்றிருந்தார். இருவரும் குறுக்குப் பாதையில் திரும்பி மறைந்தார்கள்.

ஆனால் ஜெய்சங்கர் சுக்லாவும் அகமத்கானும் அதே பாதையில் நேராக நடந்து கொண்டிருந்தார்கள். உடனே திரும்பிப் பார்க்கக்



கூடாது என்று இருவரும் தங்களுக்குள் தீர்மானித்திருந்தார்கள். அதன்படி இருவரும் திரும்பியே பார்க்காமல் — ஆனால் மிக விரைவாக — நடந்து கொண்டிருந்தார்கள். ஓரிரு நிமிஷங்களில் மாணிக்லால் திங்ரா தனது மோட்டார் சைக்கிளை வளைத்து ஒடித்துத் திருப்பி, இருவரையும் வழி மறிக்கிறாற் போல் அதை நிறுத்திவிட்டு, அதனின்று இறங்கி அவர்களை நோக்கிப் புன்னகை செய்தான்.

"ஹலோ, ஜெய்சங்கர், சவுக்கியமா?" என்று மாணிக்லால் திங்ரா தொப்பியைக் கழற்றிக் கையில் பிடித்தபடி வினவியதும் ஜெய்சங்கர் கக்லா திணறித்தான் போனான்.

"நான் போலீசில் தற்சமயம் இருந்தாலும் பழைய மாணிக்லால் திங்ரா இல்லை. மாறிவிட்டேன், எனக்கும் தேச பக்தி உண்டு. போலீசில் இருந்தபடியே விடுதலைப் போராட்ட இயக்கத்தினருக்கு மறைமுக உதவிகளைச் செய்து வரும் அரசு ஊழியர்களில் நானும் ஒருவன். என்ன அப்படிப் பார்க்கிறாய்? நம்பமுடியவில்லையா?" என்றான் மாணிக்லால் திங்ரா. முகத்தில் புன்னகை தவழ்ந்து கொண்டிருந்தது.

ஜெய்சங்கர் கக்லாவுக்குக் குழப்பமாகவும் திகைப்பாகவும் இருந்தது. என்ன பதில் சொல்லுவதென்று தோன்றாததால் அவன் மெளனமாக நின்றான்.

"நீ அகமத்கான்தானே?"

"ஆமாம்."

"பல ஆண்டுகள் ஆகிவிட்டாலும் நீங்கள் அதிகம் மாறவில்லை. நானும் அவ்வளவாக மாறவில்லை என்று நினைக்கிறேன். சரிதானே?"

ஜெய்சங்கர் கக்லாவும் அகமத்கானும் அசட்டுச் சிரிப்புச் சிரித்தார்கள்.

"என்னை நம்புங்கள், நண்பர்களே. மனிதர்கள் எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை. அன்று லண்டனில் நான் செய்தது யோசிக்காமல் செய்த அசட்டுக்காரியம். என் மனம் அப்போது பக்குவப் பட்டிருக்கவில்லை. படிப்பை முடித்தபின் இந்தியாவுக்கு வந்து, நேரில் பார்த்த பிறகு வெள்ளைக்காரர்கள் மீது உங்களுக்கெல்லாம் இருந்த கோபத்தின் நியாயம் எனக்குப் புரியத் தொடங்கிற்று. சூர்யா சென்னுக்கு மறைமுகமாய் நான் அவ்வப்போது உதவுவது உண்டு. என்னை நம்புவதும் நம்பாததும் உங்கள் விருப்பம்... நான் வரட்டுமா? பிறகு எப்போதாகிலும் சந்திப்போம்..."

மாணிக்லால் மோட்டார் சைக்கிளின் இருக்கையில் தாவியமர்ந்தபடி வாய்விட்டுப் பெரிதாய்ச் சிரித்தான். அவன் சிரித்த சிரிப்பில் தெருவில் நடந்து போய்க் கொண்டிருந்த ஒரு மனிதன் நின்று திரும்பிப் பார்த்துவிட்டுப் போனான்.

**நா**ட்கள் நகரலாயின. அவ்வாண்டு இளைஞர்களின் இரகசியக் கூட்டம் ஒன்றில் — ஆண்டிறுதித் தேர்வு முடிந்த பின்னர் — கங்கா கலந்து கொண்டான். தமிழ்நாட்டு இளைஞர்கள் மட்டும் கூடிய கூட்டம் அது. வங்கத்து இளைஞர்போல் மற்ற ராஜதானிகளின் இளைஞர்கள் விறுவிறுப்பாகச் செயல்படாததைப் பேச்சாளர் எல்லாருமே சுட்டிக் காட்டினார்கள். முடிவில் வங்கத்துடன் தொடர்பு கொண்டு, அங்கு புரட்சிக் குழுக்கள் செயல்படும் தினுசில் தாங்களும் குழுக்களை அமைக்க வேண்டும் என்று ஒரு மனத்துடன் அவர்களால் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

கூடிய விரைவில் பத்து இளைஞர்கள் கல்கத்தாவுக்கு அனுப்பப்படுவர் என்று அவ்வமைப்பின் தலைவர் சுப்பிரமணிய ராஜ் தெரிவித்தார். கட்டான உடலும், முழுமையான ஆரோக்கியமும் கூரிய கண் பார்வையும் விரைவாக நடக்கும் சக்தி உள்ளவராகவும் அந்தப் பத்துப் பேர் இருப்பர் என்றும் அவர் கூறிய போது, நல்ல உயரமும் வயதை மீறிய வளர்ச்சியும் கொண்ட தான், நிச்சயமாக அந்தப் பட்டியலில் இடம் பிடிக்க முடியும் என்கிற பெருமை கங்காவுக்கு உடனே உண்டாயிற்று.

டிசம்பர் 22 ஆம் நாளில் காந்தியடிகள் சென்னைக்கு வந்து சேர்ந்தார். அப்பா ராமசாமியுடன் கங்காவும் அவரைப் பார்க்க சென்ட்ரலுக்குப் போனான். கூட்டமான கூட்டம். கங்கா அசந்து போனான். காந்தியடிகளுக்கு இவ்வளவு கூட்டம் கூடும் என்பதே அவனுக்கு வியப்பான செய்தியாக இருந்தது. பொக்கைவாய்ச்

# மணிக்கொடி

## ஜோதிர்லதா கிரிஜா

சிரிப்புடன் காரில் ஏறிய அவரைப் பார்த்தவன் பார்த்துக் கொண்டே இருந்தான். அவரது சிரிப்பும் கூட்டத்தைப் பார்த்து அவர் செய்த கையசைப்பும் அவன் மனத்தை என்னவோ செய்தன. தனக்கு மிகவும் நெருக்கமான — தன்னை மிகவும் நேசிக்கும் பாட்டனாரைப் பார்க்கும்போது ஒரு பேரனுக்கு ஏற்படக்கூடிய பாச உணர்வு, தனது நெஞ்சில் பரவியதாக அவனுக்குத் தோன்றியது. உடல் முழுவதும் ஒரு சிலிர்ப்பு ஊர்ந்தது.

சென்ட்ரலை விட்டு வெளியே வருவதற்குப் படாதபாடு பட வேண்டி இருந்தது. ஒருவழியாக வெளியே வந்ததும் "அப்பா! காந்தி பேசறதைக் கேக்கணும்ப்பா..." என்றான்.

"என்னடா, காந்தியைப் பார்த்து நீயும் மயங்கிட்டியா?"

"அப்படின்னு இல்லேப்பா. யாரையுமே சரியாத் தெரிஞ்சுக்காம நிராகரிக்கக்கூடாது இல்லியா? அதுக்குத்தான். அவரோட பேச்சைக் கேட்டா ஓரளவுக்கு அவரைப் புரியுமில்லியா? அதுக்கும்தான்."

"உன்னை ரொம்ப இம்ப்ரெஸ் பண்ணிட்டாரில்ல?"

கங்கா சிரித்தபடி ஒன்றும் சொல்லாதிருந்தான்.

"கங்கா!"

கங்கா திரும்பினான். "ஒரு நிமிஷம் இப்படி வறியா?" என்று கேட்டுக் கொண்டு நின்றவன், அன்று இளைஞர்களின் கூட்டத்தை நடத்திய சுப்பிரமணியராஜுதான்.

ராமசாமியிடம் பார்வையாலேயே விடைபெற்றுக் கொண்டு கங்கா அப்பால் நகர்ந்து போனான்.

சில நொடிகளில் திரும்பிப் பார்த்த கங்கா, "நீங்க போங்கப்பா. நான் அப்புறமா வரேன்," என்று குரல் கொடுத்த பின், சுப்பிரமணிய ராஜுவுடன் விரைவாக நடக்கலானான்.

## 51

"நரேன், உனக்குத் தெரியுமா? அந்த நல்ல வெள்ளைக்கார அதிகாரி அலெக்சாண்டரை இந்தியாவுக்கு மாற்றிவிட்டார்களாம். இன்னும் ஒரு வாரத்துக்குள் அவர் கிளம்பிப் போக இருக்கிறார்," என்று பிற்பகல் சாப்பாட்டு நேரத்தின்போது மல்ஹோத்ரா சொன்ன தகவல் நரேந்திரநாத் பானர்ஜிக்கு அதிர்ச்சியாக இருந்தது. வாயருகே கொண்டு சென்ற கவளத்தைத் திரும்பவும் தட்டில் போட்டு விட்டு, "உண்மையாகவா?" என்றான் கண்கள் விரிய.

"ஆமாம். வெள்ளைக்கார சென்ட்ரிகள் சிலர் பேசிக் கொண்டார்கள்."

"அலெக்சாண்டர் வித்தியாசமான மனிதர். வரும் புது ஆள் அப்படி இருப்பானென்று சொல்ல முடியாது. அவன் பொல்லாதவனாக இருந்தால், நிக்கல்சனுக்குக் கொண்டாட்டந்தான். என்னைத் துன்புறுத்தவும், அளவுக்கு மீறிய தொல்லைகளை எனக்குத் தரவும் முற்படுவான்."

ஆண்டுக்கு இரண்டு கடிதங்கள்தாம் எழுதலாம் என்று சொல்லப்பட்டிருந்ததால், கொஞ்சநாள் கழித்து எழுதலாம் என்று நரேந்திரநாத் பானர்ஜி எண்ணி இருந்தான் — உடனேயே எழுதிப் போட்டு விட்டால் பிறகு ஆண்டு முடிவுவரை இன்னும் ஒரே ஒரு கடிதம்தான் எழுத முடியும் என்பதால். அலெக்சாண்டர் மாற்றிச் செல்லவிருப்பது

### மவுண்ட்பேட்டனின் ராஜதந்திரம்!



ஹிமாசல கவர்னர் சுதாகர் ராவ் நாயக் சிம்லா ராஜ்பவனில் (முன்னாள் வைசிராய் மாளிகை) பிரதான வாயில் போலவே மற்றொரு வாயில் இருப்பதைக் கண்டு வியந்து விசாரித்தபோது அறிந்த தகவல்: பாகிஸ்தான் பிரிவினைக்கான ஒப்பந்தம் அங்குதான் கையெழுத்தாயிற்று. ஏற்பாடுகளின்போது ஜின்னா இந்தியத் தலைவர்களைப் பின்தொடர்ந்து தாம் பிரவேசிப்பது தம் கௌரவத்துக்கு இழுக்கு என்றும் தாமே முதலில் நுழைய வேண்டும் என்றும் பிடிவாதம் பிடித்தார். இதை நேருவிடம் எப்படிச் சொல்வது என்று தவித்த மவுண்ட்பேட்டன் சுவரை இடித்து, சந்தடியின்றி அதே பாணி அலங்காரங்களுடன் மற்றொரு வாயிலை உருவாக்கினார். (இந்த ஏற்பாடு பற்றி அறியாமலே) நேருவும், ஜின்னாவும் ஒரே நேரத்தில் தத்தம் குழுவினருடன் மாளிகைக்குள் பிரவேசித்தனர். அக்கால கட்டத்தில் எத்தனையோ சிக்கல்களை மவுண்ட்பேட்டன் சாதுரியமாகச் சமாளித்ததற்குச் சான்றாக அந்த இரண்டாவது வாயில் விளங்குகிறது!

- டெக்கான் ஹெரால்ட்

தகவல்: அ. ஷண்முகசுந்தரம்



தொண்டர் 1 : 'சிங்கத்தின் குகைக்குள்ளேயே சென்று வெற்றிவாகை சூடிவரும் தலைவரே வருக வருக'ன்னு எதுக்கு பேனர் கட்டியிருக்காங்க?

தொண்டர் 2 : வேற ஒண்ணுமில்லை. நம்ம தலைவர் டாக்டரிடம் சின்னதா ஒரு ஆபரேஷன் பண்ணிக்கிட்டு வர்றார். அதுக்குத்தான் இத்தனை அமர்க்களம்!

- கே. சரவணகுமார்

தெரிந்ததும் அந்த மனிதரின் நல்லியல்பைத் தனக்கு ஆதாயப்படுத்திக் கொள்ளும் எண்ணம் அவனுக்கு வந்தது. தனது கடிதத்தை இந்தியாவுக்கு எடுத்துச் சென்று, தபால் மூலம் அமராவதிக்கு அனுப்ப ஒப்புக் கொள்ளுவாரா என்பது கேள்விக்குரியதுதான். இருந்தாலும் கேட்டுப் பார்க்க விழைந்தான்.

சிறையறைகளைப் பார்வையிட அவர் வந்தபோது, அவருடன் காதுகேளாத ஒரு சென்ட்ரி மட்டும் அப்போது இருந்தான். நரேன் நட்புணர்வுடன் அவரை இந்தியப் பாணியில் கும்பிட்டான்.

"உள்ளங்கைகளைச் சேர்த்து இப்படிச் செய்வதற்கு ஏதேனும் அர்த்தம் உண்டா?" என்று அவர் சிரித்தபடி வினவினார்.

"ஒரு கை நான், மற்றொரு கை நீங்கள்! உங்கள் மீது எனக்கு நட்பு உண்டு என்று சொல்லுவதே இரு கைகளின் இணைப்புக்கு அர்த்தம்."

"அழகான விளக்கமாயிருக்கிறதே!"

"ஐயா, என் மனைவிக்குக் 'கடிதம் ஒன்று' எழுதித் தருகிறேன். நீங்கள் மதராஸை அடைந்ததும் அங்கு தபாலில் சேர்த்து விட வேண்டும். இயலுமா, ஐயா?"

அலெக்சாண்டரின் இளம்பச்சை விழிகள் அவனைக் கூர்ந்து நோக்கிக் கொண்டிருந்தன. உதடுகளை உள்மடித்தபடி சில கணங்களுக்குப் பதில் சொல்லாதிருந்தபின், "சரி, ஆனால் உன் நண்பர்களுக்குக் கூட இது தெரியக் கூடாது. சட்டப்படி அது குற்றம்," என்றார் மெதுவான குரலில்.

நரேந்திரநாத் பானர்ஜியின் கண்களில் ஈரம் பரவிற்று. மறுபடியும் அவன் கைகூப்பி, "மிக்க நன்றி, ஐயா. மிக்க நன்றி. நான் உங்களை மறக்கவே மாட்டேன்," என்றான். அவன் குரல் தடுமாறித் தழுதழுத்தது. "இதன் மூலம் இவ்வாண்டு நான் வீட்டுக்கு அதிகப்படியாக ஒரு கடிதம் எழுத முடியும்...."

**அ**ன்றிரவு மெழுகுவர்த்தியின் மங்கிய ஒளியில் 'கவர் மூலைச் சந்திப்பில், சிறைக் காவலனின் உதவியால் தாளும் எழுதுகோலும் பெற்றுக் கடிதம் எழுதிய நரேந்திரநாத் பானர்ஜி, மறுநாள் சிறைக்கு வந்த அலெக்சாண்டரிடம் அதை நீட்டினான்.

"படித்துவிட்டுத்தான் உன் மனைவியிடம் இதை நான் சேர்ப்பேன். ஏற்கெனவே சொல்லி இருக்கிறேன்தானே?" என்றவாறு அவர் அதைப் படிக்கலானார்.

மனைவிக்கும் மகளுக்கும் தன் அன்பைக் கொட்டி எழுதிய பிறகு, தனது சிறை வாழ்க்கை குறித்தும் இலேசாகக் கோடி காட்டியிருந்தான். கடைசியாக, "நீ இக்கடிதத்துக்குப் பதில் எழுத வேண்டாம். அப்படி பதில் எழுதினாலும் இக்கடிதம் பற்றி உன் கடிதத்தில் ஏதும் சொல்ல வேண்டாம். இது அதிகப்படியாக நான் எழுதும் கடிதம் என்பதால், இது எப்படி அனுப்பப்பட்டது என்ற கேள்வியும் கிளம்பும், அதனால்தான். அலெக்சாண்டர் என்ற நல்லிதயம் படைத்த அதிகாரிக்குத்தான், நீ இந்த அதிகப்படி கடிதத்துக்கான நன்றி செலுத்த வேண்டும்" என்று முடித்திருந்தான்.

கடிதத்தைப் படித்த பிறகு அலெக்சாண்டர் என்ற பெயரை மட்டும் நன்றாக அடித்து விட்டு, அதை மடித்துக் காற்சட்டைப் பைக்குள் வைத்துக் கொண்ட அலெக்சாண்டர், "இதை ஓர் உறையில் போட்டு நானே அனுப்பி விடுவேன். ஆனால் முக்கியமாக ஒன்றை விட்டு விட்டாயே? விலாசம்?" என்றார்.

தலையை வெட்கத்துடன் சொறிந்து கொண்ட அவன், வேறொரு சிறு தாளில் அதை எழுதி அவரிடம் கொடுக்க, அதையும் அவர் பைக்குள் வைத்துக் கொண்டார். பிறகு விடை பெற்றுப் புறப்பட்டார்.

"**யா**ருடா அந்தப் பையன்?" என்று கங்கா திரும்பியதும் ராமசாமி அவனிடம் விசாரித்தார்.

"ஹிந்துஸ்தான் சோஷலிஸ்ட் ரிபப்ளிகன்

அசோஸியேஷனுடைய தலைவர்ப்பா. சுப்ர மணியராஜ்னு பேரு."

"சின்னவனா இருக்கான்."

"இருந்தா என்னப்பா? கடுகு சிறுத்தா காரம் போயிடுமா?"

"என்ன, ஏதாவது திட்டமா?"

"ஆமாம்ப்பா. நாளைக்கே நான் புறப்பட ணும்."

"என்னது? நாளைக்கேயா? எங்கடா?"

"கல்கத்தா போறோம்ப்பா. அவன், நான், அப்புறம் சிலர். மொத்தம் பத்துப் பேர் போறோம்."

ராமசாமி திடுக்கிட்டார். நெஞ்சுக்கூட்டுக் குள்ளிருந்து எதுவோ நழுவினாற்போல் பள்ளமாக உணர்ந்தார்.

"போய்?"

"அங்க போனதுக்கு அப்புறந்தாம்ப்பா தெரியும். அங்க போனதும் பகத்சிங், பது கேஸ்வர் தத்தா, சந்திரசேகர் ஆஸாத் இவாளோட தொடர்பு வெச்சண்டு, மேற் கொண்டு திட்டங்கள் பண்ணுவோம்... மத்த விவரமெல்லாம் சுப்ரமணிய ராஜுக்குத் தாம்ப்பா தெரியும். கல்கத்தாவிலேருந்து கௌஷிக்ங்கிறவனும், முஷ்டக் அலிங்கிற வனும் வந்திருக்கா. அவாதான் எங்களைக் கூட்டிண்டு போறா?"

"காந்தியை அப்ப நீ பார்க்க முடியாது? 27 முடிய மெட்ராஸ்ல இருக்கப் போறார்?"

"ஏம்ப்பா? காந்தி பேசறதைக் கேட்டா நான் மாறமாட்டேனான்னு உங்களுக்கு ஒரு நப்பாசை, அதானே?"

"அதேதாண்டா, கங்கா. இப்ப நான் மாறல் லியா?"

"நீங்கள்ளாம் சமயம் போல மாறிப் பேன்ப்பா. எங்களால முடியாது. காந்தி வழிக் கும் எங்களுக்கும் கொஞ்சங் கூடச் சரிப் பட்டு வராதுப்பா."

**வி**ஷயத்தைக் கேள்விப்பட்டதும் விசாலம், "வாலு போச்சு கத்தி வந்தது கதையா இருக்கே? அவன் திரும்பி வந்துட் டானேன்னு சந்தோஷப்பட்டுண்டா இப்ப இவன் கௌம்பறேங்கறானா?" — விசாலம் அழக்கூட முடியாமல் பொத்தென்று தரை யில் கைகளை ஊன்றி உட்கார்ந்தாள்.

கங்கா பெட்டியில் துணிகளை அடுக்கிக் கொண்டிருந்தான்.

"அண்ணா!"

திரும்பிய கங்கா, கண்ணீர் வழிய நின்றி ருந்த ரமணியைப் பார்த்து, அதிர்ந்து போனான்.

"ரமணி! என்னடா? எதுக்கு அழறே?"

"என்னால் தாங்க முடியல்லேண்ணா!" என்ற ரமணி, நொண்டிக் கொண்டே பாய்ந்து வந்து, கங்காவின் தோளில் முகம் பதித்துக் கொள்ள, கங்கா அவனது முதுகுப் புறம் தன் கைகளைக் கோத்துத் தாங்கிக் கொண்டான். இருவரும் கட்டுண்டிருந்த அந்த ஒரு நிமிடம் நெடிய நிமிடமாய் நீண்டது.

சற்றுப் பொறுத்து, "ரமணி, நான் அஞ்சனா மாமி வீட்டுக்குப் போய்ச் சொல் லிண்டு வந்துடறேன். நாளைக்குக் கிளம்பணு மில்லியா?" என்று கூறிவிட்டு, கங்கா கிளம் பிப் போனான்.

கதவைத் திறந்த அஞ்சனாவின் விழிகள் கலங்கிக் கிடந்தன.

அவளைப் பின் தொடர்ந்து உள்ளே சென்றவன், "என்ன, ஆச்சு, அஞ்சனா மாமி? ஏன் எல்லாரும் ஒரு மாதிரியா இருக்கேள்?" என்று கேட்டான்.

(தொடரும்)



காதலி : இத்தனை நாள் என்னைக் காதலிச்சதுக்குக் கடைசியா ஒரு உதவி செய்யணும்!

காதலன் : என்ன அது?

காதலி : என்னைக் கைப்பிடிக்கப் போறவர் நல்ல வர்தானான்னு விசாரிச்சுச் சொல்லணும்!

- அம்பை தேவா

"நாம எடுக்கறது லோ-பட்ஜெட் படமா இருக்கலாம்! அதுக்காக 'அலிபாபாவும், நாலு திருடர்களும்'னு பேர் வைச்சா மிச்சம் முப்பத்தாறு திருடங்க என்ன ஆனாங்கன்னு மக்கள் கேட்பாங்களே சார்?"

"திருட்டுத் தொழில் அவ்வளவு லாபம் தராததால அவங்கள்லாம் அரசியலில் குதிச்சுட்டாங்கன்னு ஒரு திருடனை விட்டு முதல் சீன்லே வசனம் பேச வைச்சுடுவோம்!"



# வேலுச்சாமி

'நாட்டாமை'யின் இமாலய வெற்றிக்குப் பின், எங்கே சரத்குமாருக்கு திருஷ்டி பட்டு விடப் போகிறதோ என்கிற கவலையில், சில அன்பர்கள் அவசர அவசரமாகக் கூடிப் பேசி, வேலுச்சாமியை எடுத்து விட்டிருக்கிறார்கள்.

சந்தர்ப்பவசத்தால் காதலித்தவளைக் கை விட்டு, சந்தர்ப்பவசத்தால் தன் முதலாளி மகளையே மணக்க நேர்ந்து, சந்தர்ப்ப வசத்தால் அனாதையான ஒரு சந்தர்ப்ப - சே- இளைஞனின் வாழ்வைச் சொல்லுகிற படம்.

முதலாளி மகள் மேல் வேலைக்காரன் காட்டும் பாசம் என்கிற ஒரு சப்ஜெக்டை எடுத்துக் கொண்டு இன்டர்வெல் வரைக்கும் சுதறக் கதறப் பழி வாங்கியிருக்கிறார்கள்.

அதற்கப்புறம் சூடு பிடித்தென்ன, பிடிக்காமல் போவதென்ன? சுகமான குறட்டைக்கு நூறு சத உத்திரவாதம்.

ஆஸ்பத்திரியில் கர்ப்பிணிக்குத் தரும் மாத்திரையை ஆள்வைத்து வில்லன் மாற்றி விடுவதும், உயிருக்குப் போராடும் ஹீரோயினுக்கு ஒட்டு மொத்த டாக்டர் குலம் (நவீன மருத்துவரிலிருந்து நாட்டு, பாட்டி மருத்துவர் வரை) கை விரித்து விட, கடைசியில் பாசமிகு ஹீரோவின் மனோபலம், நம்பிக்கை, கடவுள் பக்தி (உள்ளங்கையில் வேல் குத்திக்கறார் சார்!) இவை அவளைக் காப்பாற்றுவதும், தியாகி ஆவதற்கென்றே பிறந்து, வளர்ந்து வந்திருக்கும் வினிதா -ஆல்மோஸ்ட் சாமியாராகி விடுவதும் (கஷ்டம்டா!) மிச்சக்கதை.

கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன் என்று முக்கியத் துறைகளில் சென்ட்டி மீட்டர் அளவு கூடப் பாராட்ட இடமில்லை.

மூன்று நபர்கள் மட்டும் இங்கே கவனிக்கப்பட வேண்டியவர்கள்.

சரத்குமார். நடிப்பில் எக்கச்சக்க மெச்சூரிட்டி. குறிப்பாக சென்ட்டிமென்ட் காட்சிகளில் பிரமாதப்படுத்தியிருக்கிறார். தாய்மார்களின் ஒட்டு மொத்த வோட்டுக்களைச் சுருட்டி பாக்கெட்டில் போட்டுக் கொள்ளப் போகிறார்.

புதுமுகம் சுருதி. பால்வாடியிலிருந்து பிடித்து வந்திருக்கிறார்கள் என்று எண்ணு மளவுக்கு அத்தனைப் பிஞ்சு. ஆச்சர்யம், சிறப்பாக நடிக்க வருகிறது. ஒரு பெரிய ரவுண்ட் வரக்கூடிய சாத்தியம் தெரிகிறது.

தேவா. ரொம்ப நாளைக்கப்புறம் மாறுபட்ட இசை. படத்தின் மிகப் பெரிய பலம் ரீ-ரெக்கார்டிங். பாடல்கள் கொஞ்சம் முன்பின் இருந்தாலும் பின்னணியில் என்ன வென்று சொல்ல முடியாத ஒரு நவீனம். நீடித்திருக்கக் கடவது.

— ஆர்.பி.ஆர்.



# ஓர் இறுதி ஊர்வலம்

அதிகாலையில் போன் செய்து பாஸ்கர் விவரம் சொன்னான், புனீத் இறந்துவிட்டான்.'

போர்வையை உதறிவிட்டு உட்கார்ந்தேன். செய்தியின் தாக்கத்தில் உடல் நடுங்கியதுவாய் திக்கி குழற,

"பா... பாஸ்கர்.... எப்போ ஆச்சு?"

"ஒரு மணி நேரம் முன்னால."

எனக்குப் பேச்சு வரவில்லை. நாக்கு உலர்ந்து போனது. வயிற்றுக்குள் ஜவ்வாகப் பந்து உருட்டிக் கொண்டு நின்றது. நெஞ்சப் பகுதியில் தீ பரவியது.

"பிரபு, பிரபு!" - எதிர்முனையில் நான் இருக்கிறேனா என்று பரிசோதித்தான் பாஸ்கர். என்னுடைய 'உம்'முக்குப் பிறகு, 'நீ கிளம்பிப் போ' என்று மொட்டையாகச் சொல்லி, தொடர்பைத் துண்டித்தான்.

எனக்குச் சில கணங்கள் என்ன செய்வது என்று தெரியவில்லை. யாரையாவது, எதையாவது பற்றிக் கொள்ள வேண்டும் போலிருந்தது. பக்கத்தில் போர்வைக்குள் மாதவியின் கைகளைத் தேடிப் பிடித்து இறுக்கினேன். அவள் சுருட்டிய பட்டுத்துணி போல் தூங்கிக் கொண்டிருந்தாள். அடக்க முடியாத சோகம் பொங்கியது.

படுக்கையை விட்டு எழுந்தேன். குளியலறையில் குழாயைத் திருப்ப, ஊசியாய் உடல்மேல் விழுந்த நீரில் நனைந்தேன்.

மாதவி எழுந்திருக்கும் சப்தம் கேட்டது. "அதுக்குள்ள குளியலா?" அனாமத்தாகக் கேள்வி கேட்டாள். நான் பதில் சொல்லவில்லை. அவளும் என் பதிலுக்குக் காத்திருக்கவில்லை. நான் குளித்து, வெளியில் வந்து, உடைக்குள் நுழைந்தபோது காப்பியுடன் வந்தாள்.

"எங்க இவ்வளவு சீக்கிரமா?"

"புனீத் போய்ட்டான். பாஸ்கர் கூப்பிட்டுச் சொன்னான்."

அவள் காப்பியைக் கீழே வைத்துவிட்டு என் தோள்களைப் பற்றிக் கொண்டாள். என் அழுத கண்கள் அவளைக் கலக்கியிருக்க வேண்டும்.

"பிரபு, அழாதீங்க, ப்ளீஸ்..."

என் கண்ணீர் அதிகமானது. கைகளைப் பற்றிக் கொண்டாள். அவள் கைகளை மெள்ள நீக்கி, பிரயாணத்திற்கு ஆயத்தமானேன்.

"போகப் போறீங்களா?" - மாதவியின் இந்தக் கேள்வி என்னைக் கோபப்படுத்தியது. இரண்டு வருட தாம்பத்தியத்தில் என்னை நீ புரிந்து கொண்டது இவ்வளவுதானா? என்று அவளைப் பார்த்தேன். என் பார்வையின் வெப்பம் தாங்காமல் தலைகுனிந்தாள். இறந்து போனது என் புனீத், என் மகன் புனீத். என்னுடைய ரத்தம், என் சதை, என் உயிரணுக்களின் முதல் அடையாளம்.

டாக்ஸியில் போகும்போது பழைய நினைவுகள் மெள்ள மொட்டவிழ, பத்து வருடங்கள் பின்னால் போனேன். கவிதாவும் நானும் காவியமாய்க் குடும்பம் நடத்திய பொற்காலம். டாக்டரிடம் போய்விட்டு வந்த நாள் நன்றாக நினைவில் இருந்தது. கன்னமெல்லாம் சிவந்து காது மடல்கள் குங்குமமாய் கவிதா.

"என்னடா இவளோ வெக்கம்?"

"வெக்கமில்ல, வேற என்னமோ..."

"வேற என்ன?"

'தெரியல' - என்று என்னை இறுக்கமாய் அணைத்துக் கொண்டாள். மசக்கை என்று நிற்க முடியாமல், எழுந்திருக்க முடியாமல், வாயைத் திறந்தால் வாந்தி. பேசக்கூட பயந்தாள்.

"பிள்ளை ரொம்ப படுத்துது" என்பாள் எப்போதாவது.

"வெளியே வரட்டும் பேசிக்கறேன்!" என்று பொய்க் கோபம் காட்டுவேன். கண்களில் நீர் வழிய சிரிப்போம். நாட்கள் ஆக, ஆக, பொறுமையற்று, தூக்கமிழந்து தவித்தாள். பிரசவ வலியின் ஆரம்ப அறிகுறிகள் உஷார்ப்படுத்த,

"பிரபு டாக்ஸிக்குச் சொல்லுங்க."

பிறக்கப் போவது புனீத் அல்லது பவித்ரா.

ஜானகி விஸ்வநாத்

வழிநெடுக இருவரில் யார் என்று வலிக்கு இடையே பந்தயம் கட்டினாள்.

பிறந்தது புனீத். சின்னதாய், மிருதுவாய், துணியில் சுற்றி, தொட்டிலில் கிடந்தான். தொட்ட போது சிலிர்த்தது. 'குட்டிப் பாப்பா என்ன சொல்றான்?' கவிதா கேட்டபோது நிறைய சொல்லத் தோன்றியது. முடியாமல் சிரித்தேன். ஆஸ்பத்திரியிலிருந்து வீட்டிற்குக் கிளம்பிய போதுதான் டாக்டர் விவரம் சொன்னார். இன்னொரு டாக்டரின் பெயரெழுதி, சீட்டு கொடுத்து, "இவரைப் போய்ப் பாருங்க. உங்கள் குழந்தையை அவர் பரிசோதிக்கணும்..." என்றார்.

நானும் கவிதாவும் கலங்கிப் போனோம். குழந்தைக்கு ஒன்றும் இருக்கக் கூடாதே என்று வேண்டிக் கொண்டோம். இல்லை... வேண்டுதல்கள் பலிக்கவில்லை. புனீத் 'ஸ்பாஸ்டிக்' என்று நிரூபணமாயிற்று.

இந்த இடத்தில்தான் நானும் கவிதாவும் தடம் மாறிப் போனோம். என்னால் புனீத்தை ஏற்றுக் கொள்ள முடியவில்லை. வண்ண, வண்ணக் கனவுகளில் சுமந்த என் குழந்தை, நோயாளி என்பதை என்னால் ஜீரணிக்க முடியவில்லை. புனீத்தைக் கையிலெடுத்துக் கொஞ்ச மறுத்தேன். கவிதா சங்கடப்பட்டாள். எனக்கு எல்லாவற்றிலும் வெறுப்பு ஏற்பட்டது.

"புனீத் வேண்டாம் கவிதா..... ஏதாவது 'ஹோம்ல' சேர்த்துடலாம். அவனைக் காப்பாற்றி என்ன பிரயோசனம்? நாம வேற குழந்தை பெத்துக்கலாம்..." தட்டுத் தடுமாறி கவிதாவிடம் சொன்னபோது அவள் காளியானாள். என்னை ஒரு புழு போல பார்த்தாள்.

"முடியாது! புனீத் என் குழந்தை! அவன் என்கிட்டதான் இருப்பான். என் அன்பு முழுவதும் அவன் ஒருத்தனுக்கு மட்டும்தான். எனக்கு வேறு குழந்தை வேண்டாம்..." அழுத்தமாகச் சொல்லிவிட்டாள்.

எனக்கு வீட்டுக்குப் போவதில் நாட்டம் குறைந்தது. நோயற்ற நல்ல குழந்தை வேண்டும் என்று மனம் ஏங்கியது. கவிதாவின் பிடிவாதம் எரிச்சலூட்டியது. இருவரும் வெவ்வேறு திசையை நோக்கிப் பயணிக்கத் தொடங்கினோம். வெகுதூரம் வந்த பிறகுதான் புரிந்தது, எங்களைப் பிணைத்திருந்த மெல்லிய கயிறு அறுந்துவிட்டது என்று. சப்தமில்லாமல் சட்டப்படி பிரிந்தோம். வெவ்வேறு இடங்களுக்குப் போனோம். நான் மாதவியை இரண்டு வருடங்களுக்கு முன் திருமணம் செய்து கொண்டேன். அவள் என் பழைய வாழ்க்கை முழுவதுமாய் தெரிந்தே கழுத்தை நீட்டினாள்.

திடுதிப்பென்று வந்த புனீத்தின் மரணச் செய்தி என்னை உலுக்கிவிட்டது. வேண்டாம் என்று ஒதுக்கிய குழந்தையின் மரணத்திற்காக நான் படபடத்தது எனக்கே விநோதமாக இருந்தது. அங்கு எனக்குக் கிடைக்கப் போகும் வரவேற்பைப் பற்றி நான் கவலைப்படவில்லை. இறந்துவிட்ட என் குழந்தையைப் பார்க்க வேண்டும் என்று மனம் அலறியது.

**வீ**டு அமைதி காத்தது. உறவினர்கள் நண்பர்கள் திட்டுத்



திட்டாக நின்றும் உட்கார்ந்தும் இருக்க, இடையே புனீத் கிடத்தப்பட்டிருந்தான். அருகில் அமர்ந்து அந்த முகத்தைத் தடவியபோது, ஆஸ்பத்திரியில் அவன் பிறந்தவுடன் தொட்டது நினைவில் வந்தது. கண்களில் தாரை தாரையாக நீர்வழிய, தலைநிமிர்ந்து கவிதாவைத் தேடினேன். சோகமாய் உட்கார்ந்திருந்தாள். அவள் தோள்களை ஆதரவாகப் பிடித்தபடி நின்றிருந்தவன்தான் ரவியாக இருக்க வேண்டும். ஆறு மாதங்களுக்கு முன்னால் கவிதா அவனைத் திருமணம் செய்து கொண்டதாக பாஸ்கர் சொல்லியிருந்தான். சுற்றிலும் பார்வையை விட்டபோது சுவர் நிறைய விநோத சித்திரங்கள். எழுந்து போய் அவற்றைப் பார்த்தேன். எனக்குப் பின்னால் இன்னும் சிலர் சித்திரங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

"இது எல்லாமே புனீத் வரைந்த சித்திரங்கள்..." ஒருத்தி இன்னொருத்தியிடம் சொன்னதைக் கேட்டு சித்திரங்களைக் கூர்ந்து கவனித்தேன். மூலையில் புனீத் கிறுக்கலாய்க் கையெழுத்திட்டிருந்தான். சுவரில் சாய்ந்து கொண்டு கலங்கிய கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்தேன்.

"எல்லோரும் வந்தாச்சா? காரியங்கள் ஆரம்பிக்கலாமா?" இயந்திர கதியில் கேட்டபடி வந்த ஒருவர் கவிதாவைப் பார்க்க, அவளின் மெல்லிய தலையசைப்பில் என் மகனின் இறுதிச் சடங்குகள் துவங்கின.

"குழந்தையோட தகப்பனார் இங்க வாங்கோ..." கூப்பிட்ட குரலுக்கு நான் நடக்க ஆரம்பிக்குமுன் ரவி அங்கிருந்தான். ஈரத் தலை, ஈரவேட்டியுடன் புனீத்தின் தந்தையாய்க் காரியங்களை ஆரம்பித்தான். நான் பொறுமை இழந்தேன். கவிதாவை நேராகப் பார்த்தேன். அவள் சலனமற்று உட்கார்ந்திருந்தாள். பூமி அதிர அவள் அருகே போனேன். "நிறுத்தச் சொல்லு இந்த கேலிக் கூத்தை. நான் புனீத்தின் அப்பா. நான்தான் இதைச் செய்ய வேண்டும்!" என்று கர்ஜித்தேன். கவிதா என்னைப் பார்த்த பார்வையில் இருந்தது கோபமா, பழிவாங்குதலா, என்று இனம் காண முடியவில்லை.

"மன்னிக்கணும். ரவிதான் புனீத்தின் அப்பா. உங்களுக்கும் புனீத்திற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை. பிறந்த சில நாள்லயே நீங்கள் அவனை நிராகரிச்சுட்டீங்க. இப்ப 'மகன் மகன்'னா எப்படி...? எப்படி சாத்தியம்? மேலும் சட்டப்படி விவாகரத்து ஆன பிறகு உங்களுக்கு என் மீதோ, என் குழந்தை மீதோ எந்தவிதமான உரிமையும் இல்லை. தயவு செய்து நீங்க போயிடுங்க... என்னோட சேர்த்து புனீத்தையும் ஏற்றுக்கிட்ட ரவிதான் புனீத்தின் அப்பா. இன்னிக்கித் தெரிவிக்கலைன்னா புனீத் இறந்து போன சமாசாரம் கூட உங்களுக்குத் தெரிய நியாயமில்லை. ப்ளீஸ், எங்களை விட்டுடுங்க...! கவிதா கைகூப்பியபடி கீழே சரிந்தாள்.

எனக்குக் கவிதாவின்மேல் கோபம் ஏற்படவில்லை. ஆனால், ஏதோ துக்கம் தொண்டையை அடைத்தது. யாரையாவது கட்டிக் கொண்டு அழவேண்டும் போலிருந்தது. மகனை இழந்ததால் துக்கமா அல்லது தந்தை ஸ்தானம் மறுக்கப்பட்டதால் இந்த துக்கமா என்று புரியவில்லை. வராந்தாவில் உட்கார்ந்தேன். அமைதியான என் மகனின் உடல் வெளியேற்றப்படுவதைப் பார்த்தேன். சடலத்தைத் தொடர்ந்த என் மகனுடைய அப்பா கையில் தீச்சட்டி.. கறுப்பு வண்டி எல்லோரும் ஏறியதும் புகை கக்கிப் புறப்பட்டது. "புனீத்..." என்று பெரிதாகக் குரலெடுத்து நான் கேவிக் கேவி அழுது கொண்டேயிருந்தேன்.

---

## குழந்தை!



குழந்தை ஒரு
கவிதையென்றால்...?
மரபுக் கவிதையா...?
புதுக் கவிதையா?
பட்டிமன்றம் நடந்தது.
முடிவில் நடுவர்
தீர்ப்பு சொன்னார் :
ஆணும் பெண்ணும்
பெற்றெடுத்தால்
மரபுக்கவிதை.
சோதனைக்குழாய்
பெற்றெடுத்தால்
புதுக்கவிதை.

— சக்திவேல்



## எறும்பார் ரிப்போர்ட்:

எறும்பார் செம 'கடி' மூடில் இருந்தார்.

"கோழி ஏன் ரோட்டை கிராஸ் பண்ணுச்சு தெரியுமா?" என்று ஆரம்பித்தார்.

"ஏன்?" என்றேன். இதழ் முடித்த நாளின் ஆயாசம் இன்னும் விலகாமல்.

"எதிர்ப் பக்கத்துக்குப் போகத்தான்!"

"Very funny!"–கடுப்படித்து விட்டு கதைகள் ஃபைலை எடுத்துப் பக்கத்தில் வைத்துக் கொண்டேன்.



# ரிக்ஷா இழுத்த டாக்டர்!

"என்ன? கதை படிக்கப் போறியா? இதெல்லாம்விட சுவாரஸ்யமான கதை ஒண்ணு நான் சொல்றேன் கேளு– உண்மைக் கதை!" என்று கதைகள் ஃபைலின் ஓரத்தையே சிம்மாசனமாக்கி, கால் மேல் கால் போட்டுக் கொண்டார்.

"குந்நிக்கண்ணன், குந்நிக்கண்ணன்னு ஒரு ஸ்டேஷன் மாஸ்டர். கேரளாவில்– திருவனந்தபுரம் சிடி பஸ் ஸ்டாண்டு ஸ்டேஷன் மாஸ்டர் இவர்."

"அவருக்கென்ன?"

"இந்த குந்நிக்கண்ணனை டீவில பேட்டி கண்டாங்க. பேட்டியிலே அவர் என்ன சொன்னார் தெரியுமா?"

"அர்ஜுன்சிங்தனமா ஏதாவது பேசிட்டாரா...?"

"ஓ. அதே! 'அரசு பஸ்களை இன்னும் கவனமா, திட்டமிட்டு, நேரம் தவறாம ஓட்டினா ஜனங்க பஸ் கிடைக்காம தவிக்க மாட்டாங்க; தனியார் பஸ்ஸுங்களுக்கு அவசியமும் இருக்காது'– அப்படின்னு ஒரு போடு போட்டாரு. வல்லாத பிரச்னையாயி! இப்போ ஆளு சஸ்பெண்டட் ஆக்கும்!"

"திருவனந்தபுரத்துல தனியார் பஸ்ஸுங்க மட்டும் சுறுசுறுப்பா ஓடிக்கிட்டிருக்காக்கும்?"

"ஓ. அதே!" என்றவர் அதற்கு மேல் தமிழில் சம்சாரித்தார்: "அந்த ஊர்ல வஞ்சியூர் சம்ஸ்கிருத பல்கலைக் கழகம்னு இருக்கு. அங்க மொத்தம் எவ்வளவு ஸ்டூடன்ட்ஸ் தெரியுமா?"

"160?"

"ஹூம்! நீ சொன்ன நம்பர்ல முதல், கடைசி டிஜிட்டை நீக்கினால் சரியான விடை!"

"ஒரு யூனிவர்ஸிடில ஆறே ஸ்டூடன்ட்ஸா?"

"ஆமாம். ஆனால், ஆசிரியர்கள் எண்ணிக்கை பதினேழு! இது எப்படி இருக்கு...!"

"சோகம்தான்! இதைவிட சோகமா ஒரு நியூஸ் சொல்லட்டா..?"

"ஒரு மாறுதலுக்கு நீதான் சொல்லு... நான் கேட்டுக்கறேன்..." ரிலாக்ஸ் ஆனார் மிஸ்டர் எறும்பு.

"சண்டிகர்ல குரிந்தர்பால் சிங்னு ஒருத்தர் பஞ்சாப் பப்ளிக் சர்வீஸ் கமிஷன் உயர் அதிகாரிகளுக்கான எக்ஸாம் எழுதித் தேர்வாயிருக்காரு..."

"அவருக்கென்ன?"

"பஞ்சாப் யூனிவர்சிடியில் பௌதிகம் படிச்சு டாக்டரேட் வாங்கினவரு. இத்தனை நாளா வேற வேலை கிடைக்காம, சண்டிகர்ல ரிக்ஷா ஓட்டிப் பிழைச்சுக்கிட்டிருந்தாரு!"

கொஞ்சம் ஆடிப்போனார் எறும்பார். ஒரு முழு நிமிட மௌனத்தைக் கலைத்து, "சரி எழுந்திருங்க, நான் கதை படிக்கணும்" என்றேன்.

"அவசரப்படாதே! தலாய் லாமா சண்டிகர்ல தர்மஸ்லாங்கற இடத்துலயிருந்துதான் உலகத்துல உள்ள எல்லா திபெத்தியர்களையும் நிர்வகிக்கிறார்னு தெரியுமா?"

"தெரியும். அங்க பெரிய கட்டடம் ஒண்ணு கட்டியிருக்காங்க. அதுக்கு நிறைய அந்நியச் செலாவணி உதவி கிடைச்சுதாம். இதுல சட்டச் சிக்கல் உண்டாகி இப்ப இந்திய அரசாங்கம் வழக்கு பதிவு செஞ்சிருக்காம். நேற்று வரை நம்ம அரசாங்கம் தலாய் லாமாவுக்கு ஆதரவாத்தானே இருந்துச்சு...?"

"ஆமாம், ஆனா இப்ப பிரச்னை வந்துடுச்சு போலிருக்கு. தலாய் லாமாவே, இப்படி வேறொரு நாட்டுல இருந்துக்கிட்டு அரசு நடத்தறதைப் பத்தி, உலகம் முழுக்க சிதறிக்

## மோட்டார் சைக்கிள் பரிசுப் போட்டி — 24

குறிப்பு ஒன்று- விடைகள் இரண்டு! ஆம்; ஒவ்வொரு குறிப்புக்கும் இரு விடைகள் உண்டு. அவற்றை இரு வேறு பகுதிகளில் உள்ள கட்டங்களில் பொருத்தமாக நிரப்ப வேண்டும்.

**மேலிருந்து கீழ்:**

1) இரக்கம்

2) உணவுப் பொருள்களில் இது இருப்பது விரும்பத்தகாத நிலை

3) என்னதான் சட்ட மீறல் என்றாலும் இதை வலியுறுத்திக் கேட்காத மாப்பிள்ளை வீட்டினர் குறைவுதான்.

4) ஒன்று பொய்க்காமல் இருந்தால்தான் மற்றது வளமாக இருக்கும்

**இடமிருந்து வலம்:** (1) ஒரு பிரபல தென்னிந்திய ஆடல் வகை.

இன்னும் இரண்டே வாரங்கள்தான் பாக்கி. 26-வது வார முடிவில் விடைகளை மொத்தமாக அனுப்புங்கள். மிக அதிக அளவில் சரியான விடைகளை எழுதுபவருக்கு மோட்டார் சைக்கிள் பரிசு. ஆறுதல் பரிசுகளும் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே இறுதியானது.







பெயர் : ..................................................

முகவரி : ..................................................

கிடக்கற அகதிகள்கிட்ட வாக்கெடுப்பு நடத்தப் போறாராம்..."

"ஒரு ஊர்ல எலக்ஷன் நடக்கவே நாம அவதிப்படறோம். உலகம் முழுக்க சிதறியிருக்கறவங்களைக் கண்டுபிடிச்சு கருத்து கேக்கறதுனா கஷ்டமில்லையா?"

"நமக்கு எல்லாமே கஷ்டம்தான். கோயில்ல நாலு கதவிருந்தா நாலையும் பூட்டணுமேன்னு யோசிக்கறவங்க நாம..."

"ஏரிகாத்த ராமர் கோயில்ல திருட்டுப் போனதைச் சொல்றீங்களா?"

"ஆமாங்கறேன். எங்க பார்த்தாலும் திருட்டு, புரட்டுதான். கொஞ்சம் விட்டா, ஏரியைக் கூட திருடிடுவாங்க போலிருக்கு..."

"ஏரியைப் பாதுகாக்கறவங்க கூட இருக்காங்க..."

"யாரு...?"

"இங்க இல்ல; அதுவும் சண்டிகர்லதான். சுக்னா ஏரின்னு இருக்கு. நகருக்குக் குடிதண்ணி சப்ளை இதுலயிருந்துதான். சுக்னா நதியோட முகத்துவாரத்துல இது இருக்கிறதால ஆத்து வண்டல் பூரா இதுல வந்து சேர்ந்துடும். வருஷா வருஷம் ராணுவம்தான் ஊர் ஜனங்க உதவியோட தூர் எடுத்துச் சுத்தம் பண்ணுது. இப்போ ஜப்பான் அரசு உதவ முன்வந்திருக்காம். முகத்துவாரத்துல ராட்சஸ சல்லடைகளை நிறுவித் தருவாங்களாம். வடிகட்டின தண்ணி மட்டும் சுக்னா ஏரியில வந்து விழுமாம்..."

"என்ன இருந்தாலும், ஜப்பான்காரங்க வடிகட்டின சாமர்த்தியசாலிங்கப்பா.." என்று ஃபைனல் கமெண்டுடன் 'சிம்மாசன'த்திலிருந்து இறங்கிப் போனார் மிஸ்டர் எறும்பு.

தகவல்கள்: **ரமணன், எஸ்.எஸ்.மணி.**

# வட்டமேஜை

## சரியான நெத்தியடி!

♦ தமிழகத்தில் வாழப்பாடியுடன் கைகோத்துக் கொண்டு அர்ஜுன்சிங் சுற்றுப் பயணம் செய்த நிகழ்ச்சித் தொகுப்பை, மிகவும் சுவைபட ரசிக்கும்படியாக நீமு., நீபி. என பிரித்துப் போட்டு அசத்தியது அருமை.

செம்பட்டி, சோ. இராமு.

♦ கூட இருந்தே குழி பறித்த அர்ஜுன்சிங், திவாரி, வாழப்பாடி போன்றவர்களின் மீது ராவ் நடவடிக்கை எடுத்ததைப் பாராட்டிய தாங்கள், ஊழல் செய்த மந்திரிகளையும் இதுபோன்று ராவ் "களை" எடுக்க வேண்டும் என்று சுட்டிக்காட்டியிருந்தால் தலையங்கம் இன்னும் நன்றாக இருந்திருக்கும்.

மதுரை - 3, ம. மாரிமுத்து.

♦ இவ்வளவு நாட்கள் ராவுடன் இருந்து விட்டு, திடீரென 'ஞானோதயம்' பெற்றுப் புலம்பும் அர்ஜுன்சிங்கிற்கு இந்த வாரத் தலையங்கம் சரியான நெத்தியடி!

தஞ்சாவூர் - 5, வனிதா.

♦ "மாயவலை வீசும் மாத்திரைகள்" — அதிர்ச்சி ரிப்போர்ட், நிஜமாகவே அதிர்ச்சி ரிப்போர்ட்தான்.

சங்கரன்கோயில், கோ. ரா. சந்திரன்.

♦ 'சினிமா காலில் விழும் சின்னத்திரை' ஓர் அருமையான அலசல். தூர்தர்ஷனை மட்டுமே குறை சொல்ல முடியாது. ஸ்பான்சர்களுக்கும் சிறந்த கண்ணோட்டம் வேண்டும் என்ற பால கைலாசம் அவர்களின் வாதம் மிகச் சரியானது.

திருச்சிராப்பள்ளி, ஐ. மனோகர் இன்பராஜ்.

♦ கதிரி கோபால்நாத் கவர் ஸ்டோரியைப் படித்தேன். இன்றைய காலச் சூழலிலும் தமது தனித் திறமையோடு போராடி ஜெயித்து வரும் அவர் உண்மையில் பாராட்டுக்குரியவர்!

மணலூர்பேட்டை, பாரதிமுருகன்.

♦ ஏழு ஸ்வரங்களும் கதிரியாரின் சாகஸக் கருவியில் குதூகல உல்லாசமாய் வெளிவரும் அழகை அட்டையில் காட்டிய கெட்டிக்காரத்தனத்திற்குப் பாராட்டுகள்.

மதுரை - 16, எல்.எம். அபிதாட்சயா.

♦ கம்ப்யூட்டர் நுழையாத இடமே இல்லையோ... என்று யோசிக்க வைத்து விட்டது 'கம்ப்யூட்டர் கச்சிதத்துடன் கான்ட்ராக்டர் கல்யாணம்' கட்டுரை.

தூத்துக்குடி, சிவராமசுப்பிரமணியன்.

♦ தங்களது சினிமா விமர்சகர், எங்கள் "புரட்சி கலைஞர்" அவர்கள் நடித்து வந்துள்ள புதிய படமான "கருப்பு நிலா"விற்கு எழுதியுள்ள விமர்சனம் எங்களது மனதை புண்படுத்துவது போல் உள்ளது. மற்றவர் மனது புண்படும்படியாக இனிமேலும் விமர்சனம் செய்ய வேண்டாம் என்றும் விஜயகாந்த் அவர்களை உங்கள் விமர்சகருக்குப் பிடிக்கவில்லையெனில், அவரது படங்களுக்கு அவர் விமர்சனமே எழுத வேண்டாம் என்றும் மிகத் தாழ்மையுடன் வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம்.

சென்னை - 83,
தி. துரைசாமி மற்றும் புரட்சிக் கலைஞரின் அன்புத் தம்பிகள்.

♦ 'சடங்கு' சிறுகதை ஏழை மக்களின் உயர்வான உள்ளத்தை படம்பிடித்துக் காட்டியது. எவ்வளவு செலவு செய்கிறோம் என்பதை விட, எப்படிச் செலவு செய்கிறோம் என்பதுதான் முக்கியம், அதில்தான் மனதிருப்தியே உள்ளது என்பதை 'செலவு மெய்ப்பட வேண்டும்' படம் பிடித்துக் காட்டியது. பெண் கிங்க்ஸ்லியின் பேட்டி தன்னம்பிக்கை ஊட்டுவதாக இருந்தது.

வடகரை, பாலு.

♦ ஜோதிர்லதா கிரிஜா எழுதிய மணிக்கொடி பட்டொளி வீசிப் பறப்பதைக் கண்ணாரக் கண்டு மகிழ்கிறேன். அந்தக் காலத்து சரித்திர சம்பவங்கள் பின்னிப் பிணைந்திருக்கும் விதம் தத்ரூபமாயிருக்கிறது. எழுத்தில் தேசபக்தி 'நெருப்பாய்' சுடர் விடுவதோடு, பெண்ணின் உணர்வுபூர்வமான தூய அன்பிற்குத் தரப்பட்டிருக்கிற முக்கியத்துவம் நினைந்து நினைந்து போற்றுதற்குரியது. பாராட்டுகள்!

சென்னை - 40, லலிதா பாரதி.

கே. பாலசந்தர்

**29** THREE QUALITIES ARE REQUIRED FOR A TRULY GREAT ARTISTE. A MAN'S BRAIN; A WOMAN'S HEART AND A CHILD'S TEMPERAMENT.

# நினைவலைகள்

'கையளவு மனசு' T.V. serial படப்பிடிப்பை முடித்துக் கொண்டு அன்று வீடு திரும்பிய போது இரவு மணி 10.15. T.V. remote ஐ அழுத்தினேன். ஏதோ ஒரு தமிழ் சாடலைட் சேனல் ஓடிக் கொண்டிருந்தது; அதில் எனது 'நிழல் நிஜமாகிறது' திரைப்படத்திலிருந்து ஒரு clipping போட்டார்கள். நினைவலைகள் என்னை விசாகப்பட்டினம் அழைத்துச் சென்றன.

அன்று மே தினம்; ஆண்டு 1980; இந்தியில் தயாராகிக் கொண்டிருந்த 'மரோசரித்ரா'வின் மூன்றாவது ஷெட்யூல் விசாகப்பட்டினத்தில் ஆரம்பம். கொரமாண்டல் எக்ஸ்பிரஸில் அன்று காலை புறப்பட்டு, இரவு சுமார் ஏழரை மணியளவில் விசாகை போய்ச் சேர்ந்தேன். எட்டரை மணியளவில் நான் ஹோட்டலை வந்தடைந்ததும், ஏற்கெனவே ஹைதராபாத்திலிருந்து விசாகை வந்திருந்த கமல், அவர் தங்கியிருந்த ஹோட்டலிலிருந்து எனக்கு போன் செய்தார்.

"I am sorry to give this news" என்று ஆரம்பித்த கமல், இடிபோன்ற அந்தச் செய்தியைச் சொன்னார். "யார்?" என்று மூன்று முறை நான் திருப்பித் திருப்பிக் கேட்டேன். அதற்கு மேல் எனக்குப் பேச நா எழவில்லை. ரிசீவரைக் கீழே வைத்து விட்டேன். என்னுடன் வந்திருந்த என் மனைவி விக்கித்துப் போய் உட்கார்ந்து விட்டாள்.

அன்றிரவே படப்பிடிப்பு தொடங்குவதாக இருந்தது. உடன் படப்பிடிப்பை ரத்து செய்தேன். விசாகை கடற்கரையில் போய் உட்கார்ந்தேன். சென்னையிலிருந்து புறப்பட்டு வந்தவுடனே, இப்படி இதயத்தை இரு கூறாகப் பிளக்கும் செய்தியை நான் எதிர்பார்க்கவில்லை. அதுவும் 'பசி' திரைப்படத்தின் 150-வது நாள் விழா நடைபெறவிருந்த அன்றேவா? 1979-ம் ஆண்டின் சிறந்த நடிகையென அகில இந்திய தேசிய விருதைப் பெற்றதாக அறிவிக்கப்பட்ட ஒரு மாத காலத்திற்குள்ளாகவா? இதென்ன irony? இதென்ன tragedy? இதென்ன கொடுமை?

இரவு மூன்று மணி வரை அதே வேதனை மிக்க சிந்தனை. கண்களை மறைக்கும் கண்ணீரின் ஊடே மங்கலாகத் தெரிந்த ஷோபாவின் உருவத்தைப் பார்க்கிறேன். முதன் முதலாக ஷோபாவை எங்கே சந்தித்தேன்? நினைவுத் தோணியைப் பின்னுக்குத் தள்ளுகிறேன்; நிழலாட்டமாகக் காட்சிகள் வருகின்றன.

கலாகேந்திரா அலுவலகம்; பல புதிய முகங்களைத் தேர்வு செய்த அதே அறை; சிவாஜிராவை சந்தித்த அதே இடம்; அங்கே தான் ஷோபாவையும் சந்தித்தேன். அவரது தாயாருடன்.

ஃபார்முலா கதாநாயகிகளுக்கே உரித்தான உருவம் இல்லை; குரலும் இல்லை. மெல்லிய, ஒடிந்து விழுவதைப் போன்ற ஓர் உருவம். சோகம் கலந்த மெலிதான ஒரு குரல். அந்த உருவத்தை இமையசைக்காமல் பார்த்தேன். அவரது முகத்தில் விரவிக் கிடந்த தெளிவும், கண்களில் பளிச்சிட்ட குறுகுறுப்பும் என்னைச் சுண்டி இழுத்தன.

எனது மேற்பார்வையில் வெளிவந்த தெலுங்குத் திரைப்படம் 'சிலகம்மா செப்பிந்தி'யைத் தமிழில் 'நிழல் நிஜமாகிறது' என்கிற தலைப்பில் தயாரிக்க முற்பட்ட பொழுதுதான் அந்த சந்திப்பு நிகழ்ந்தது. தெலுங்குப் படத்தில் நடிகை ஸ்ரீபிரியாவை அறிமுகப்படுத்தியிருந்தோம். அதே கதாபாத்திரத்தில் தமிழிலும் முதலில் ஸ்ரீபிரியா அவர்களே நடிப்பதாக இருந்தது. தமிழில் முன்னணிக் கதாநாயகியாக வளர்ந்து கொண்டிருந்த ஸ்ரீபிரியாவினால் அதிகப்படியான 'கால்ஷீட்' தேதிகள் கொடுக்க முடியாத காரணத்தினால், ஒரு புதுமுகத்தை 'நிழல் நிஜமாகிறது' படத்தில் அறிமுகப்படுத்த நினைத்தேன்.

'ஷோபா'வைப் பற்றிக் கேள்விப்பட்







டிருந்த நான் அவரை வரவழைத்துப் பார்த்தேன். "தமிழ்ப் படங்களில் நடிப்பதற்கான சந்தர்ப்பங்கள் வருகின்றன; ஆனால் தமிழில் உங்கள் மூலம் ஷோபா அறிமுகம் ஆவதைத்தான் நான் பெரிதும் விரும்பு கிறேன்" என்று அவரது தாயார் சொன்னதும் 'ஆமாம்' என்பதைப் போல் ஷோபா தலையாட்டியதும் ஏதோ நேற்றுத்தான் நடந்த நிகழ்ச்சிகள் போல் தோன்றுகின் றன.

தமிழுக்காக திரைக்கதை அமைக்கும் போது சில மாற்றங்கள் செய்திருந்தேன். அதில் முதலாவது மாற்றம் கதாநாயகி 'திலகம்' என்கிற ஏழைப் பெண்ணின் குண சித்திரத்தின் உள்ளுணர்வில் இழையோடும் அந்த under current ஹாஸ்யம். அது ஒரு tragic humour.

ஏழை திலகம் பற்றிய ஒரு சின்ன அறிமுகத்துடன் படம் தொடங்குவது நினைவிருக்கலாம். அன்றாடங் காய்ச்சியாக, ஓர் அனாதைப் பெண்ணாக கிராமத்தை வலம் வந்து கொண்டிருக்கும் அந்தப் பெண் தன்னை அடிக்கடி ராணியாகக் கற்பனை செய்து கொள்வாள்.

ராணியாக மந்திரி சகாக்களுடன் ஊரை வலம்வந்து கொண்டிருப்பாள்; தெரு ஓரமாக ஆறு வயதுச் சிறுவன் ஒருவன் சிறுநீர் கழித்துக் கொண்டிருப்பான். அதைப் பார்த்த காவலாளிகள் அவனை விரட்டுவதற்கு ஓடு வார்கள்; ராணி குறுக்கிட்டு காவலாளிகளைக் கடிந்து கொள்வாள். 'சிறுவனைப் பாதியில் தொந்தரவு செய்யா தீர்கள்' என்று சொல்லி விட்டு உடன்வரும் மந்திரிப் பெருமகனாரிடம் 'நகரில் ஆங்காங்கே கழிப்பறை கட்ட ஏற்பாடு செய்யுங்கள்' என்று நேரடி உத்தரவுகள் இடு வாள்.

குறும்புகள் நிறைந்த இந்தச் சோகக் குணசித்திரத் திற்கு 'ஷோபா'வும் அவரது உடல்வாகும் மிகவும் பொறுத்தமானதுதான் என்றாலும் ஸ்ரீபிரியா நடித்துப் பெயர் பெற்ற அந்தப் பாத்திரத்தில் ஒரு புதியவரைப் போடுகிறோமே என்கிற பயமும் இல்லாமல் இல்லை.

கதை ஆரம்பிப்பதற்கு முன் ரசிகர்களுக்கு மத்தியில் அந்தக் கதாபாத்திரத்தின் மீது ஒரு பிடிப்பை ஏற்படுத்த வேண்டும் என்கிற நோக்கத்தில்தான், படத்தின் 'டைட் டில்'களின் போது ஷோபாவின் விதவிதமான மிகப் பெரிய 'குளோசப்'களைப் போட்டு, திரும்பத் திரும்ப அவரது முகத்தைப் பார்க்கும்படி செய்து, 'டைட்டில்' கள் முடியும் போது அவரைப் பார்த்துப் பழகிய முகம் போல் செய்கின்ற ஒரு 'டெக்னிக்'கைக் கையாண்டிருந் தேன். வழக்கமாகவே I believe in very tight close ups.

தேவையில்லாமல் கேமராவை அங்குமிங்கும் அசைத்து சர்க்கஸ் வேலைகள் காட்டுவதில் எனக்கு எப்பொழுதுமே உடன்பாடில்லை. அதிலும் ஒரு புதிய முகத்தை அறிமுகப்படுத்தும் போது, அந்த முகத்தை, முகத்தில் இழையோடும் சில தனித் தன்மைகளோடு நேருக்கு நேராக அமைதியாகப் பார்த்து, பார்ப்பவர் களே அந்த முகத்தில் காணப்படும் வசீகரங்களையும் சில நுட்பங்களையும் உணரும் விதத்தில் கேமரா கோணங்களை அமைப்பதில்தான் நான் நம்பிக்கை வைக்கிறேன்.

இப்பொழுதெல்லாம் எத்த னையோ பாடல் காட்சிகளைப் பார்க்கிறேன். பாடுகின்ற கதாநாய கியின் முகத்தைப் பார்ப்பதற்கே சர்க்கஸ் ஷாட்டுகள் நம்மை அனு மதிப்பதில்லை.

"One should not use the camera as if it were a broom." அதாவது ஒரு துடைப்பத்தைப் போன்று காமிராவை உபயோகிப்பதை நான் வெறுக்கிறேன் என்று Robert Bresson சொல்லியிருப்பதாக எனக்கு நினைவு.

Back to Shoba!

ஷோபாவின் குரலில் எப்போ துமே ஒரு சோக இழையோடும். இனம்புரியாத ஒரு tragedy அதில் மறைந்திருக்கும். 'இந்தச் சின்ன

வயதில் இவருக்கு இப்படி ஒரு சோக இழை யோடும் குரலா?' என்று நான் வியந்ததுண்டு.

வெகு இயற்கையாக நடிக்கின்ற ஒரு திற னைப் பெற்ற ஷோபா, ஊர்வசி விருதைப் பெறக்கூடிய அளவிற்கு குறுகிய காலத்திற் குள் தன் திறமையை வளர்த்துக் கொண் டது எத்தனை பாராட்டுக்குரியது! கட்டுரை யின் ஆரம்பத்தில் சொல்லியிருக்கிற மேற் கோளை மெய்ப்பிப்பது போல் ஒரு ஆண் மகனின் மூளையும், ஒரு பெண்ணின் இதய மும், ஒரு குழந்தையின் temperamentம்தான் இவரை ஒரு சிறந்த கலைஞராகத் தோற்றுவித் திருக்கிறது.

'நிழல் நிஜமாகிறது' படத்திற்குப் பிறகு என்னுடைய படங்களில் ஷோபா நடிக்க வில்லை. அவருடைய வளர்ச்சியை, நான் தூரத்திலிருந்தே கவனித்து வந்தேன்; ரசித் தேன்; மகிழ்ந்தேன்.

'பசி' திரைப்படம் வெளிவந்த பிறகு அதில் அவருடைய பங்கையும் நடிப்பையும் மனதாரப் பாராட்ட நினைத்தேன். எனது பாராட்டுக்களை போனில் தெரிவித்துக் கொள்ளலாமா என்று நான் எண்ணிய மாத் திரத்திலேயே, ஊரும் நாடும் பாராட்டும் வகையில் சாதனை புரிந்திருந்த அவரை, சர்வசாதாரணமாக போனில் பாராட்டிப் பேசி, இதை ஒரு சாதாரண சம்பவமாக ஆக்கி விட என் மனது இடம் கொடுக்க வில்லை.

திடீரென்று முன்னறிவிப்பு எதுவுமில்லா மல் surprise ஆக அவரது வீட்டிற்கே சென்று பாராட்டுத் தெரிவித்தால் அவர் மிகவும் மகிழ்ச்சியடைவாரே என்று நினைத்து, நான் சென்னையில் இருந்த நேரங்களில் பலமுறை முயற்சி செய்தேன். படப்பிடிப்பிற்காக அவர் பெங்களூரில் தங்கி இருப்பதாகத் தெரிய வந்தது.

நான் படப்பிடிப்பிற்காக வெளியூர் சென்று மீண்டும் திரும்பிய போது, தேசிய விருது பெற அவர் டில்லி சென்று விட்டார். இப்படியே அவரை சந்திக்க முடியாதபடி சந்தர்ப்பங்கள் சதிசெய்து கொண்டிருந்தன. அவர் மறைந்த அன்று, ஒரு மாலை அணி விக்கக்கூடிய வாய்ப்பு கூட எனக்குக் கிட்டா மல் போனது எனது துரதிர்ஷ்டமே!

'நினைவிருக்கிறதா ஷோபா?

'கமலுக்கு இணையாக அத்தனை இயற் கையாக நடித்த உன்னிடம் ஒரு நாள் படப் பிடிப்பிலே வேடிக்கையாக நான் சொன் னேன் : "இந்தக் காட்சியிலே நீ கமலை சாப் பிட்டு ஏப்பம் விட்டு விட வேண்டும்! அப் படிச் செய்தால் உனக்கு ஏதாவது பரிசு தருகி றேன்" என்று சொன்னேன். அன்று நீ அதைச் செய்து காட்டினாய். நான்தான் என் வாக்கைக் காப்பாற்றவில்லை.

'இன்னொரு நாள்! ஷாட்டுகளுக்கு இடை யில் கண்ணாடியும் கையுமாக இருந்த உன்னை "டச்சப்புக்கு என்ன அவசரம்; முத லில் வசனங்களை சரியாகப் பார்த்து பழகிக் கொள்" என்று எனக்கே உரித்தான அதட் டலுடன் நான் கடிந்து கொண்டதும், மின்ன லென உனது கண்களில் பாய்ந்து நின்ற உனது மாறிய முகபாவம் இன்னமும் என் மனத்திரையில் freeze ஆகி நிற்கின்றது.

'இவ்வளவு சின்ன வயதில் ஊர்வசி விருது யாருக்குக் கிடைத்திருக்க முடியும்? கலைத் துறையைச் சேர்ந்த நாங்கள் எல்லோ ரும் பெருமைப்பட்டோம். எத்தனை பேர் உன்னைக் கண்டு பொறாமைப்பட்டிருப்பார் கள்? அகில இந்திய தேசிய விருது - அது தான் அந்தப் பாழாய்ப் போன 'ஊர்வசி' விருது - அத்தனை பொல்லாததா?

'மே தினம் - உலகத் தொழிலாளர் வர்க் கத்தின் ஒரே நாளை உனது நினைவு நாளாக மாற்றி விட்டுச் சென்று விட்டாயே! இது நியாயமா?

'உனது achievementகளுக்காக உன் னைப் பாராட்டவா; தேசிய விருது பெற்றதற் காக உன்னை வாழ்த்தவா? இல்லை...

'உனது கடைசி **சிறுபிள்ளைத்தனத்திற்** காகக் கடிந்து கொள்ளவா?

"There is a foolish corner in the brain of the wisest man" என்று Aristotle சொன்னார்.

'அது உனக்கும் பொருந்துகிறது என்பது தான் tragic irony!'

(தொடரும்)



"தலைவரே, நம்ம எம்.எல்.ஏ. ஒருத்தர் கள்ளக் கடத்தல் செய்து மாட்டிக்கிட்டாராம்."

"இதுக்குத்தான் நான் அப்பவே இந்த மாதிரி தொழில் அனுபவமில்லாத ஆளுக்கெல்லாம் சீட் கொடுக்க மாட் டேன்னு சொன்னேன்."

- எஸ். இராஜேந்திரன்.

மனையடி சாஸ்திரம்! அனுபவ மனையடி நூல்! மனையடி சாஸ்திரம்

## வளம் பெருக்கும்

# வாஸ்து சாஸ்திரம்

## விலை ரூ. 50

தொகுத்தவர் : பேராசிரியர், டாக்டர். எம்.பி.ஆர்.எம். இராமசாமி

பொறியாளர் : எம்.ஆர்.எம். முத்துக்குமார்

புது வீடு கட்டி, புதுமனை புகுவிழா நடத்தி புது வீட்டில் குடியேறுவது என்பது மகிழ்ச்சி தரக்கூடியதுதான்.

அதேசமயம் நம்முடைய ஏற்றத் தாழ்வுகளுக்கு நாம் குடியிருக்கும் வீடுகளும் காரணமாய் அமையும் என்பதையும் மறுப்பதற்கில்லை.

எத்தனையோ பேர் கடைக்கால் போட்ட நிலையிலும், பாதி கட்டி முடித்த நிலையிலும் மேற்கொண்டு தொடர முடியாமல் தவிப்பதை நாம் காண்கிறோம். இன்னும் சிலர் குடியேறிய பின்னும் தவிக்கிறார்கள். ஒரு சிலர் ஓஹோவென்று வாழ்கிறார்கள். கொடிகட்டிப் பறக்கிறார்கள்.

இதற்கெல்லாம் என்ன காரணம்?

வீடுகள் மனையடி சாஸ்திரப்படி அதாவது வாஸ்து சாஸ்திர அடிப்படையில் அமைவதும் அமையாததுமே காரணம் எனலாம். அமைத்தால் அமோகமாக வாழலாம். செல்வம் செல்வாக்கு பெருகும்; கீர்த்தி புகழ் ஓங்கும்.

சொந்த வீட்டுக்காரருக்கு மட்டுமல்ல; குடித்தனக்காரருக்கும் இது பொருந்தும். சாஸ்திரப்படி கட்டப்பெறாத வீடுகளாயின் குடித்தனக்காரர்களும் தொல்லைகளுக்கு ஆளாக வேண்டியதுதான். எனவே, தொல்லைக்கு ஆளாகிக் கொண்டிருக்கும் குடித்தனக்காரர்கள் தாங்கள் குடியிருக்கும் வீடு சாஸ்திரப்படி அமைந்துள்ளதா என அறிய இந்நூலின் துணையை நாடுவது நல்லது.

சொந்த வீட்டின் அமைப்போ குடித்தனம் செய்யும் வீட்டின் அமைப்போ கோளாறாக இருந்தால் அலுவலகத்தில் கரைச்சலும், அண்டை அயலாருடன் அபிப்பிராய பேதங்களும் ஏற்பட்டுக் கொண்டே இருக்கும். உங்கள் வீட்டாரேகூட உங்களை மதிக்க மாட்டார்கள். வேளாவேளைக்குச் சரியாக உண்ணக் கூட முடியாது சார்!

உங்கள் பக்கத்து வீட்டுக்காரரோ, உங்கள் தெருவில் குடியிருக்கும் நபரோ உங்கள் மீது தேவையில்லாமல் எரிந்து விழுந்தால், உதாசீனப்படுத்தினால் அதற்கும் கூட வீடு காரணமாகலாம். நீங்கள் மேற்கொள்ளும் முயற்சிகள் தொடர்ந்து தோல்வி அடைந்தாலும் கூட வீடு காரணமாகலாம்.

குடித்தனம் செய்பவரானால் வேறு வீடு மாற்றிப் பாருங்கள். சொந்த வீட்டுக்காரரானால் இந்த நூலைக் கையில் வைத்துக் கொண்டு வீட்டு அமைப்பில் சிறு மாறுதல்களைச் செய்து பாருங்கள். உடனேயே மாற்றங்கள் தோன்ற ஆரம்பிக்கும்.

செல்வம் செழிக்க, கொழிக்க வேண்டிய வீடுகள் எப்படி அமைய வேண்டும், எந்தெந்த அறைகளை எப்படி அமைக்க வேண்டும், எப்படி அமைத்தால் செல்வம் கொழிக்கும் என்பதை இந்நூல் தெளிவாக எடுத்துச் சொல்கிறது.

வாஸ்து சாஸ்திர அடிப்படையில் சமையல் அறை, பூஜை அறை, படிப்பறை, வழிபாட்டு மண்டபம், ஹால், படுக்கை அறை, கிணறு, தண்ணீர்த் தொட்டி, குளியல் அறை, கழிப்பிடம், மலக்குழி, மாடிப்படிகள், தாழ்வாரம், சிட் அவுட்கள், நிலவறைகள், அடிநிலக் கிடங்குகள், ஓட்டுத் திண்ணைகள், கருவூலம், வாகனங்கள் நிறுத்துமிடம், தொகுதி வீடுகள், உணவு விடுதிகள், கடைகள், தொழிற்சாலைகள், ஊழியர் உறைவிடம் போன்றவற்றை எங்கு எவ்வாறு அமைக்க வேண்டும் என்பதை ஏராளமான பட விளக்கங்களோடு இந்நூல் விளக்குகிறது. எல்லாரும் பயப்பட்டுக் கொண்டிருக்கும் 'தெருக்குத்து' பற்றி இந்நூலில் விளக்கப்பட்டுள்ளது ஒரு தனிச் சிறப்பாகும். அஸ்திவாரம் எப்படி அமைக்க வேண்டும். எப்படி மண்ணைத் தோண்ட வேண்டும் என்பதுகூட மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது.

தனிப்பிரதி வேண்டுவோர் ரூ. 50 மட்டும் M.O. மூலம் அனுப்பவும். வி.பி.பி. செலவு தனி. புத்தகக் கடைகளிலும் கிடைக்கும்.




## ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்ஸ்,

2, முத்துக்கிருஷ்ணன் தெரு, த.பெ. எண் : 1040,
பாண்டி பஜார், தி. நகர், சென்னை - 17.
தொலைபேசி : 8281902.

# மேக்சிமா-குரூப் நிறுவனங்கள்



**MAXIMA**

மேக்சிமா பெனிபிட் பண்ட் லிமிடெட்
மேக்சிமா கிரெடிட் லிங்க்ஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா சிட்ஸ் மெட்ராஸ் (பி) லிமிடெட்
மேக்சிமா இண்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி

உங்கள் முதலீட்டிற்கு

**25%**

வட்டி+
1% ஊக்கத்தொகை
வழங்குகிறது

ஒவ்வொரு மாத வட்டிக்கான காசோலை மொத்தமாக முதலீடு செய்யும் பொழுதே வழங்கப்படும்.

## உங்கள் வருங்காலக் கனவுகளை நனவாக்கும் வளமான சேமிப்புத் திட்டங்கள்.

| | | |
|---|---|---|
| பிக்சட் டெபாசிட் | ஒவ்வொரு மாதம், காலாண்டு, அரையாண்டுகளில் வட்டி வழங்கப்படும். | குறைந்தபட்ச முதலீடு ரூ.5,000/- |
| குமுலேட்டிவ் டெபாசிட் | 45.60% P.A அதிக பட்ச வட்டியாக பெறுவீர் | ரூ.5,000/- |
| கோல்டன் டெபாசிட் | முதலீடு 3 வருடங்களில் இருமடங்காகும் | ரூ. 7,500/- |

**மேக்சிமா - உங்கள் முதலீட்டிற்கு முழுப் பாதுகாப்பு அளிக்கக் கூடியது.**

| காலம் | வட்டி |
|---|---|
| 12 மாதங்கள் | 26.80 % |
| 24 மாதங்கள் | 30.40 % |
| 36 மாதங்கள் | 32.66 % |
| 48 மாதங்கள் | 39.67 % |
| 60 மாதங்கள் | 45.60 % |

மேலும் விவரங்களுக்கு
**மேக்சிமா இண்வெஸ்ட்மெண்ட் & பைனான்ஸ் கம்பெனி**
**பதிவு அலுவலகம்** : 1, வேதாந்த தேசிகர் தெரு, லஸ் பஜார் அருகில், மயிலாப்பூர், சென்னை - 600 004. தொலைபேசி : 4941849. Fax : 044-4347655. தந்தி : MAXFIN
**தலைமை அலுவலகம்** : 146, எல்டாம்ஸ் ரோடு, சென்னை - 600 018. தொலைபேசி : 456950 / 458549 / 452559
**கார்ப்பரேட் அலுவலகம்** : 'ஜெயம் பில்டிங்' AA-147, 3வது அவின்யூ, அண்ணா நகர், சென்னை - 600 040 தொலைபேசி : 6280468

Aparna

**கிளை அலுவலகங்கள் : -**

K.R. பில்டிங் 124-A, வேட்டிஸ்பிரிட்ஜ் ரோடு, அடையாறு, சென்னை - 600 020 தொ.பே. 415511

'ராஜ ராஜேஸ்வரி டவர்' 567-568, டாக்டர் நஞ்சப்பா ரோடு, காந்திபுரம், கோயம்புத்தூர்-641 018. தொ.பே. 231938

***மேக்சிமா - அதிகபட்ச நம்பிக்கைக்குரியது.***



“நான் நானாக இருந்து, நீ நீயாக இருந்து, அது அதுவாக இருந்து, இது இதுவாகவே இருந்தால் நாம் நாமாகவே இருப்போம். ஆனால், நான் நீயாக இருந்து, நீ நானாக இருந்து, இது அதுவாக இருந்து, அது இதுவாக இருந்தால் நாம் நாமாகவே இருக்க முடியுமா? முடியாதென்றால், யார் யாராக இருப்பார்கள்? எது எதுவாக இருக்கும்?”

என்ன! விசுவே பயந்து ஓடக்கூடிய அளவுக்குத் தலைசுற்றுகிற சமாசாரமாக இருக்கிறதா? ஆனால், “இதில் பயப்படுவதற்கு எதுவுமே இல்லை. மேலேயுள்ளது நிஜமாகவே ஒரு நல்ல தத்துவம். கொஞ்சம் நிதானமாக யோசித்தால்

# வருகிறார், ஐசுவின் பார்ட்னர்!

அது அறுவையல்ல; அருமையான விஷயம் என்பது சுலபமாகப் புரியும்!” என்கிறார் பாலு. சீனிவாசன்.

‘அறுவை ஓர் அரிய கலை’ என்று ஒரு புத்தகமும் எழுதத் துவங்கியிருக்கும் இவர், “உண்மையில் அறுவை என்று எதுவுமே கிடையாது!” என்று அடித்துச் சொல்லுகிறார்.

ஆனாலும் மாணவர்கள், ‘போர் அடிக்கிறது’ என்கிறார்கள்; ‘அந்த ஆசிரியர் வந்து அறு அறு என்று அறுத்துத் தள்ளி விட்டார்’ என்கிறார்கள். நாமே கூட சிலரைப் பார்க்கும் போது, ‘சரியான பிளேடு’ என்று பயந்து ஓடுகிறோமே, இதெல்லாம் ஏன்?

“உண்மையில் அறுவை என்று நமக்கு ஒரு விஷயம் எப்போது தோன்றுகிறது என்றால், நமது மூளை சலிப்பும் களைப்பும் அடைகிற போதுதான். இந்தச் சலிப்பும் களைப்பும் எப்படி ஏற்படுகிறது? சொல்கிறவர் ஒரு விஷயத்தைச் சுவாரஸ்யமாகச் சொல்லாத போது, அல்லது நாம் அந்த விஷயத்தில் கொஞ்சம் கூட ஆர்வமில்லாமல் கேட்டுக் கொண்டிருக்கும் போதுதான் இந்த ‘அறுவை’ என்கிற விஷயம் எட்டிப் பார்க்கிறது.

“சாதாரணமாக, சில நாட்களுக்குப் பிறகு நம்மைச் சந்திக்கிற நண்பர், ‘என்னப்பா, எப்படியிருக்கிறாய்? ஆபீஸ் வேலையெல்லாம் எப்படியிருக்கிறது?’ என்று கேட்டால் நாம் என்ன சொல்லுகிறோம்? ‘அதை யேன்பா கேட்கறே... சுத்த போர்’ என்கிறோம்.

“ஆனால், உண்மையில் வாழ்க்கை என்பது ‘போர்’ அடிக்கிற சமாசாரமா என்ன? இல்லவே-இல்லை. காலையில் வழக்கத்தை விடக் கொஞ்சம் சீக்கிரமாக எழுந்தாலே போதும்; எதையும் நாம் அவசர அவசரமாகச் செய்ய வேண்டியதில்லை. காப்பி சாப்பிடுதல், உணவு அருந்துதல், பேப்பர் படிப்பது எல்லாவற்றையும் நிதானமாக ரசனையுடன் செய்து விட்டு ஆபீஸ் கிளம்பலாம்! ஆபீஸ் வேலையிலும் கொஞ்சம் ஆர்வம் காட்டினாலே போதும்; அது சுவாரஸ்யமாகி விடும்! அந்தக் ‘கடன்கார’ மானேஜர் நம்மைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டும் நல்லவராகி விடுவார்.

“இதெல்லாம் நமக்குத் தெரியாதா என்ன? தெரியும். ஆனாலும் நான் என்னிஷ்டப்படி தான் செய்வேன்; மற்ற விஷயங்களும் என்னிஷ்டப்படி எனக்குத்தான் வளைந்து கொடுத்துப் போக வேண்டும் என்று நாம் அடம்பிடிப்பதுதான் இந்த ‘போர்’ சமாசாரத்தைக் கொண்டு வந்து விடுகிறது!” என்கிறார் பாலு. சீனிவாசன்.

நான் நானாக இருப்பதில் என்ன தவறு?

“தவறே இல்லை. நான் நானாகத்தான் இருக்க வேண்டும். அதே போல் அவனும் அவனாகத்தான் இருப்பான்; அது அதுவாகத்தான் இருக்கும்; இது இதுவாகத்தான் இருக்கும். ஆனால், நீங்களோ, நான் நானாகத்தான் இருப்பேன்; அவனும் நானாகத்தான் இருக்க வேண்டும்; அதுவும் நானாகத்தான் இருக்க வேண்டும்; இதுவும் நானாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைக்கிறீர்கள். இதனால் தான் அவனும் அவனாக இல்லை; அதுவும் அதுவாக இல்லை; இதுவும் இதுவாக இல்லை என்று உங்களுக்குத் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் அவன் அவனாகத்தான் இருக்கிறான்; அது அதுவாகத்தான் இருக்கிறது; இதுவாகத்தான் இருக்கிறது; நீங்கள்தான் நீங்களாக இல்லாமல் எல்லாமாகவும் இருக்க ஆசைப்பட்டுத் தவிக்கிறீர்கள்!” என்கிறார் பாலு. சீனிவாசன்!

சந்திப்பு : துளசி

# கோயில்களில் சினிமா ஷூட்டிங் — 'ஜெ' யோசனை குறித்து...?

● பிரகதா,
ஸ்ரீரங்கம்.

? "மகளிர் மட்டும் ஏறி இறங்கும் வழி" - திருச்சியில் ஒரு பஸ்ஸில் பார்த்தது. சினிமாவினால் நன்மையா? தீமையா?

! "மகளிர் மட்டும்" என்ற பஸ் வாசகம்தான் சினிமா டைட்டில் ஆச்சு. மேடம்! நாமதான் சினிமா மோகத்தால எல்லாத்தையும் தலை கீழாப் பார்க்கறோம்!

● ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? "காந்திஜியின் கொள்கைக்கு மத்திய அரசின் புதிய பொருளாதாரக் கொள்கை மாறுபட்டது அல்ல" என்று பிரதமர் கூசாமல் கூறுகிறாரே?

! இரண்டுக்குமே அடிப்படை, "தன்னிறைவு" என்ற இலட்சியம் என்பதால் அப்படி கூறியிருப்பார். ஆனால் ஒற்றுமை அதோடு முடிந்து போகிறது. புதிய பொருளாதாரக் கொள்கையையே காந்திய அடிப்படையில் திருத்தி அமைப்பது சாத்தியம் தான். அதற்கு முதலில் அமைச்சர்கள் அடக்கம், எளிமை, வாய்மை முதலியன கடைப்பிடிக்க வேண்டும். சாத்தியமா என்ன?

● தென்றல்பிரியன்,
மேலூர்.

? "பெண்கள்" என்றதும் உங்கள் நினைவுக்கு வருவது?

! சேற்றில் நாற்று நடும் கரங்கள்; ஒரு குடம் நீருக்காக மைல் கணக்கில் நடக்கும் வலுவான கால்கள்; ரேஷன் கடை கியூவில் நேரத்தையும் ஆற்றலையும் வீணடித்துச் சோர்ந்து திரும்பும் முகங்கள்.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? "பாபர் மசூதி இடிக்கப்படும் விஷயம் மத்திய அரசுக்கு முன்கூட்டியே தெரியும்" என்று அர்ஜுன்சிங் கூறியுள்ளாரே?

! உண்மை என்று ஏற்பது எனில், அப்போது இவரும் அமைச்சரவையில் ஒருவராக இருந்ததால் குற்றவாளியாகிறார்!

● இரா. சக்திவேல், பரமத்திவேலூர்.

? "வரதட்சிணை ஒழிப்பு இயக்கத்தில் ஈடுபடும் மாணவ மாணவியருக்கு ஐந்து மதிப்பெண்கள் வழங்கப்படும்" என்று நெல்லை பல்கலைக் கழகத் துணைவேந்தர் அறிவித்துள்ளாரே?

! மார்க்கை வாங்கிக் கொண்டு வாக்கை மறந்து விட வாய்ப்புண்டு. இப்படி ஆசை காட்டுவதால் சமுதாய மாற்றங்களை உருவாக்கி விட முடியாது!

● பி. கடலையாண்டி, சென்னை - 52.

? 'ஜெ'க்கு வைக்கப்படும் கட்-அவுட்டுகளைக் குறைகூறும் கல்கி, "சோனியாவின் 50 அடி கட்-அவுட்டும் ராஜீவின் மார்பளவு கட்-அவுட்டும் அனைவரையும் வரவேற்றன" என்று எழுதுவது ஏன்? (அர்ஜுன்சிங் சென்னை விஜயம் கட்டுரை).

! ராஜீவின் கட்-அவுட்டை விடவும் சோனியா கட்-அவுட் பெரிதாக இருந்தது என்பதை எடுத்துக் காட்டுவதுதான் நோக்கமே தவிர, கட்-அவுட் கலாசாரத்தை ஆதரித்ததாக ஆகாது.

● அகவினி ஐயப்பன், சென்னை - 5.

? இந்தியாவில் புரட்சி தோன்றுவதற்கான சூழ்நிலை நிலவுகிறது. ஆனால் புரட்சி தோன்றுமா?

! புரட்சியெல்லாம் தலைவர்களின் பட்டங்களோடு சரி. நமக்கு கேபிள் டீவி பார்க்கவே நேரம் போதவில்லையே!

● கா. ஆ. கிருஷ்ணன்,
சென்னை - 44.

? நன்றிக்கு நாய்; பொறுமைக்குக் கழுதை; முயற்சிக்குச் சிலந்தி; சுறுசுறுப்புக்கு

எறும்பு; மனிதன் எதற்கு?

! இது மாதிரி லிஸ்ட் எடுப்பதற்கு!

● எல்.எம். மங்கை, மதுரை.

? "சாவி" இனி வெளிவரா தாமே?

! எத்தனையோ பேருக்கு அட்ரஸ் கொடுத்த பத்திரிகை. ஹும்... வருத்தமாகத்தான் இருக்கிறது. ஆயினும் என்ன! சாவியின் புதிய எடிஷன்தான் 'ஜம்'மென்று வந்து கொண்டிருக்கிறதே!

● ம. மாரிமுத்து, மதுரை.

? தஞ்சை தமிழ் மாநாடு மலரில் திருக்குறளின் கீழ் "ஜெயலலிதா" என்று அச்சிடப்பட்டிருப்பதைக் கலைஞர் சுட்டிக் காட்டியதற்கு, "அது அச்சுப் பிழை" என்று ஒப்புக் கொண்ட எஸ்.டி.எஸ்., கூடவே "நாங்கள் ஒன்றும் ஞான சூனியங்கள் அல்ல" என்றும் கூறியுள்ளாரே?

! அட, கஷ்டகாலமே! தமிழரசு ஜனவரி இதழில், "கல்லணையைக் கட்டியது ராஜராஜ சோழன்" என்று வெளியிட்டதற்கு என்ன சொல்லப் போகிறாரோ! "அடி முட்டாள்கள் அல்ல" என்றா?

● ஜெ. கண்ணன், சென்னை - 101. ❑

? நமது விஞ்ஞானிகள் ராக்கெட் ரகசியங்களை விற்கிறார்கள்; நமது டாக்டர்கள் கிட்னி விற்கிறார்கள்; நாடு எங்கே போகிறது?

! அரசியல்வாதிகள் நாட்டையே விற்கக் காத்திருக்கிறார்கள், ஐயா! கவனமாயிருங்கள்!

● மு. இரவிச்சந்திரன், சேலம்.

? சமீப மின்கட்டண உயர்வு ஷாக் அடித்ததா?

! ஊழல் என்ற ரப்பர் கையுறை இல்லாத நம் போன்றோருக்கு பயங்கர ஷாக்தான்!

● எம். ஜெயமுருகன், ரிஷிவந்தியம்.

? "அரசியலில் குதிக்கும் எண்ணம் இடையாது" என்கிறாரே சென்னாரெட்டி?

! இப்போது அவர் ராஜ்பவனில் செய்து கொண்டிருப்பதற்கு வேறு என்ன பெயர் வைக்கலாம்? எப்படி அழைக்கலாம்?

● வை. வேங்கடேசன், விழுப்புரம்.

? கடமை உணர்ச்சியுடன் சேஷன் தமது அதிகாரங்களைப் பிரயோகிக்கும் போது அரசியல்வாதிகள் பாராட்டாமல் இருப்பது ஏன்?

! அவரது கட்டளைகள் இவர்களை நேர்மையாக நடக்குமாறு வற்புறுத்துவதுதான் காரணம்!

● ஆர். எம். பாண்டியன், பெருங்காடு.

? தமிழனின் எதிர்காலம் எப்படி இருக்கும்?





• கோவில்களில் ஷூட்டிங்!

• ... டாப்!





! அரசுடன் ஐக்கியமாகப் போவதாகக் கேள்வி!

● ச. ஜான் ரவி, கோவில்பட்டி.

? "கோயில்களில் சினிமா ஷூட்டிங் நடத்த அனுமதித்து, அதில் கிடைக்கும் பணத்தைக் கொண்டு கோயில் புனரமைப்பு செய்ய வேண்டும்" என்ற ஜெயலலிதா ஆலோசனை குறித்து?

! இதே வாதிக்கப்படி விபசார விடுதிகள் நடத்திக் கிடைக்கும் பணத்தை எயிட்ஸ் ஒழிப்புக்குப் பயன்படுத்தலாமே!

● தேன்மொழி மன்னவன், கோனாபட்டு.

? வீட்டு மின் கட்டணத்தை உயர்த்தி விட்டு சினிமா தியேட்டருக்குக் குறைப்பது என்பது...?

! வீட்டுக் கவலையை மறந்து சினிமா தியேட்டரில் போய் உட்காரலாம்னா, டிக்கெட் கட்டணத்தை எக்கச்சக்கமாய் உயர்த்த அனுமதி வழங்கிட்டாங்களே!

● கே. ஆர். வேலுச்சாமி, வடக்கலூர்.

? சோனியா காந்தி, மேனகா காந்தி - அரசியலுக்கு யார் டாப்?

! முன்னவர் சாட்டை சுற்றி சுழலத் தயாரா யுள்ள பம்பரம்; பின்னவர் சுற்றிச் சுற்றி அடங்கி, சரிந்து விட்ட பம்பரம்!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ஜெ. கண்ணன்,
246, 11வது தெரு,
அண்ணா நகர் மேற்கு,
சென்னை - 600 101.



• மீட்புக் குழு நடத்திய பேரணி... (படம் - நன்றி : தினத்தந்தி)

சிவகாசி நாடார்கள் ஒருபுறமும், தூத்துக் குடி நாடார்கள் ஒருபுற முமாக இரண்டு அணி களாகப் பிரிந்து போனதில், வங்கி யின் 40 சதவிகிதப் பங்குகள் சிவகாசிக் காரர்கள்வசம் இருந் திருக்கின்றன.

# கோஷ்டிப் பூசலால் விளைந்த விபரீதம்!

## தமிழ்நாடு மெர்கன்டைல் வங்கி!

நாடார் சமூக மக்களின் நலனுக்காகவும், முன்னேற்றத்துக்காக வும் சுமார் 75 வருடங்களுக்கு முன் தொடங் கப்பட்டது தமிழ்நாடு மெர்கன் டைல் வங்கி. அப்போது இதற்கு 'நாடார் பாங்க்' என்று தான் பெயர்.

இப்போது, குஜராத்தைச் சேர்ந்த எஸ் ஸார் நிறுவனம், இந்த வங்கியின் ஏறக்குறைய 64 சதவிகிதப் பங்குகளை வாங்கியிருக்கிறது.

இதனால் வங்கியின் கட்டுப்பாடு அந்த நிறுவனத்தின் கைக்குப் போய்விடும் என்ப தால் எஸ்ஸார் நிறுவனம் வாங்கிய பங்கு களைத் திரும்பப் பெறுவதற்காக மீட்புக் குழு ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது. தவிர, அனைத்து நாடார் சங்கங்களின் ஒருங்கி ணைப்புக் குழுவின் தலைவரான சென்னை யைச் சேர்ந்த எஸ்.சி. பாண்டியன் பொறுப்பு ஏற்றுக் கொண்டிருக்கிறார்.

ஜனவரி 30ஆம் தேதி, மீட்புக்குழு ஒரு பேரணி நடத்தி, சென்னையிலுள்ள ரிசர்வ் வங்கியின் மேலாளரிடம் மனு ஒன்றைக் கொடுத்தது.

ஆனால் – நாடார் சமூகத்தின் கையி லிருந்த பங்குகள் எப்படி எஸ்ஸார் நிறுவனத் துக்குக் கிடைத்தன என்று விசாரித்த போது கிடைத்த தகவல்கள் கொஞ்சம் அதிர்ச்சி தந் தன:

– தூத்துக்குடிக்காரர்களின் கை ஓங்கி விடாமல் இருக்க, சிவ காசிக்காரர்களே எஸ்ஸார் நிறுவனத்திடம் தாமாக முன்வந்து, 40 சதவிகிதப் பங்குகளையும் விற்று விட்டார் கள். வெகுகாலமாகவே இரு பிரிவினருக்கும் இடையே இருந்து வந்த புகைச்சலே இதற்குக் காரண மாம். மிகுதியை எஸ்ஸார் நிறுவனம் மார்க் கெட்டில் வாங்கியுள்ளது. எஸ்ஸார் வாங்கப் போகிறது என்றதும் பங்குகளின் மதிப்பு எக்கச்சக்கமாக உயர்ந்தது!

இந்தப் பின்னணியில், ஒருங்கிணைப் புக் குழுவின் தலைவர் எஸ்.சி.பாண்டிய னைத் தொடர்பு கொண்டோம்.

"இரு தரப்பினருக்கும் இடையே சமா தானம் ஏற்பட வாய்ப்பு உண்டா?" என்று விசாரித்தோம்.

"தங்கள் தவறை சிவகாசிக்காரர்கள் உணர்ந்து கொண்டு விட்டனர். அதனால் இப்போது மனஸ்தாபம் எதுவும் இல்லை. ஒருங்கிணைப்புக்குழுவில் அவர்களும் அங் கம் வகிக்கிறார்கள்" என்றார் பாண்டியன்.

"எஸ்ஸார் நிறுவனத்திடமிருந்து பங்கு களை மீட்கும் பட்சத்தில் அவற்றை மறுபடி யாரிடம் விற்பீர்கள்? சிவகாசிக்காரர்களிட மேயா?"

"எங்களின் உறவின் முறையைச் சேர்ந்த ஐநூறுக்கு மேற்பட்ட பிரமுகர்களுக்கு விற் போம். அவர்களும் வாங்கத் தயாராய் இருக் கின்றனர்."

— சித்தார்த்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி, பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன். முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் : ரூ. 525/-.

# வாழ்க்கை ஆரம்பமாகிறது 58ல்



## ... நீங்கள் இப்போது அதற்கு திட்டமிட்டால்!

அறிமுகப்படுத்துகிறோம் யூடிஐ-ன் ரிடையர்மெண்ட் பெனிஃபிட் பிளான். உங்கள் பணி ஓய்வை எதிர்நோக்க மற்றும் அதன் பல்வேறு மகிழ்ச்சியைப் பெற உதவும் முதலீடு அடிப்படையிலான முதல் பணி ஓய்வுத் திட்டம். நீங்கள் செலுத்தும் தொகை பிரிவு 88-ன் கீழ் வரிச்சலுகையைப் பெறும்.

யூடிஐ-ன் ரிடையர்மெண்ட் பெனிஃபிட் பிளானில் முதலீடு செய்யுங்கள். வேறெந்த முதலீடும் இதைவிடச் சிறந்தது அல்ல.

### சிறப்பம்சங்கள்

- 18-52 வயது வரை உள்ள தனிநபர்கள் இதில் சேரலாம்.
- மொத்த குறைந்தபட்ச தொகையான ரூ. 10,000த்தை குறைந்தபட்ச தவணையான ரூ.500 (மற்றும் அதன் மடங்குகளில்) என்றவாறு 20 வருடாந்தர தவணைகளுக்கு மேற்படாமல் 52 வயது வரை செலுத்த வேண்டும். மொத்த தொகைக்கு உச்சவரம்பு கிடையாது. 52 வயது வரையிலும் ரூ. 10,000 பணம் செலுத்தத் தவறினால் 15% தள்ளுபடியில் மறு கொள்முதல் செய்ய வேண்டும்.
- முகப்பு மதிப்பு ரூ. 10 முதல் மாதத்தில் விற்பனை சம விலையில் மற்றும் அதற்குப்பின் என்ஏவி அடிப்படையிலான விற்பனை விலையில் (மூன்று தசம பாயிண்டுகள் வரையிலான யூனிட்களின் அலாட்மெண்ட்.)
- வருமான வரிச்சட்டம் 1961 பிரிவு 88-ன் கீழ் செலுத்தப்படும் மொத்தத் தொகையான ரூ.60,000 த்திற்கு உட்பட்ட தொகைக்கு வரிச்சலுகை உண்டு.
- 58 வயதிலிருந்து மாதாந்தர வருவாய்.
- 70 வயதிற்குப் பிறகு என்ஏவி அடிப்படையிலான மறு கொள்முதல் விலையில் பணம் திரும்பப் பெறும் வசதி. முதிர்வுறும் காலத்திற்கு முன்பே பணம் திரும்பப் பெறவேண்டுமானால், மறு கொள்முதல் தொகையில் 10% தள்ளுபடி.

முதல் முதலீடு அடிப்படையிலான பணி ஓய்வுத் திட்டம்.



யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா
உங்களுடைய மேலான எதிர்காலத்திற்கு

RETIREMENT BENEFIT PLAN
பணி ஓய்வின் மகிழ்ச்சியைக் கண்டுணருங்கள்

பங்குகளை பணத்திலும், செக்யூரிட்டிகளிலும் செய்யப்படும் அனைத்து முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்க்கிற்கு உட்பட்டவை. செக்யூரிட்டி மார்க்கெட்டை பாதிக்கும் காரணங்களைப் பொறுத்து என்ஏவி திட்டங்கள் ஏற்றத்தாழ்வுகளுக்கு உட்படலாம். கடந்தகால சாதனை வருங்கால விளைவைக் குறிப்பதாகாது. ரிடையர்மெண்ட் பெனிஃபிட் பிளான் என்பது திட்டத்தின் பெயரே தவிர, திட்டத்தின் தரத்தை, அதன் எதிர்கால வாய்ப்பு அல்லது ஆதாயத்தை எவ்வகையிலும் குறிப்பிடுவது அல்ல. பிளான்களின் நோக்கங்கள் நிறைவேற்றப்படும் என்று யாதொரு உறுதியும் அளிக்கப்பட மாட்டாது. முதலீடு செய்யுமுன் வழங்கு பத்திரத்தை நன்கு செய்து படிக்கவும்.

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101.
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 214973 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060.

UTI- 159/94 C

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka

# ஜெய ஜெய சங்கர ஹர ஹர சங்கர



காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி சுவாமிகளும் சுலிவன் கார்டன் பெனிபிட் பண்ட் நிறுவனத்துக்கு விஜயம் செய்து வழங்கிய நல்லாசியை இந்நிறுவனத்தின் வாடிக்கையாளர்கள் அனைவருக்கும் அளித்த அருளாசியாகக் கருதுகிறோம். தமிழகத்தின் மேன்மைக்கும் பாரதத்தின் உயர்வுக்கும் பிரார்த்திக்கிறோம்.

30.1.95 மாலை நான்கு மணிக்கு நமது நிறுவனத்துக்கு வருகை புரிந்து பெருமைப்படுத்திய இரு பெரியவர்களையும் சகல மரியாதைகளுடன் டைரக்டர்களான பி.கே. சந்திரசேகரன், பி.கே.வி. ரமேஷ் ஆகியோர் வரவேற்று, வந்தனை புரிந்து, நிறுவனத்துக்கும் அதன் நிர்வாகிகளுக்கும் ஊழியர்களுக்கும் வாடிக்கையாளர்களுக்கும் நல்லாசிகளைப் பெற்றனர்.



## சுலிவன் கார்டன் பெனிபிட் பண்ட் லிட்.,




பதிவு அலுவலகம் : 8, கற்பகாம்பாள் நகர், மயிலாப்பூர்,
சென்னை - 600 004. போன் : 4993241/4990953
நிர்வாக அலுவலகம் : 132, ராசப்ப செட்டி தெரு,
பார்க் டவுன் (முதல் மாடி), சென்னை - 600 003. போன் : 563055